# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN):978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 5 விளைச்சல் : 49 திருவள்ளுவர் ஆண்டு 2055 சூன் – 2024



# முன்னாள் படைவீரர் நல இயக்ககக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Airman | வான்படை வீரர் |
| Battalion | படையணி |
| Civil driving licence | குடிமுறை ஓட்டுநர் உரிமம் |
| Coast guard | கரையோரக் கடல் காவல்படை |
| Colour service | கொடிப் படைப் பணி |
| Death grant | இறப்பு நல்கை |
| Defence quota | படைத்துறை ஒதுக்கீடு |
| Demobilization | படைக் கலைப்பு |
| Disability pension | இயலாமை ஓய்வூதியம் |
| Disabled soldier | மாற்றுத்திறனாளி படை வீரர் |
| Discharge certificate | படைவிடுப்புச் சான்றிதழ் |
| Entitlement card | உரிமைச் சீட்டு |
| Family pension | குடும்ப ஓய்வூதியம் |
| Field workshop | போர்க்களப் பணிமனை |
| Flag day fund | கொடிநாள் நிதி |
| Gallantry award | வீர விருது |
| Honorary commission | மதிப்புறு ஆணையம் |
| Housing grant | வீடு கட்டும் நல்கை |
| Jawans bhavan | படைவீரர் மாளிகை |
| Night patrol force | இரவு சுற்றுக்காவல் படை |
| Record office | பதிவுருக் காப்பகம் |
| Territorial army | மாநிலப் படை |
| War services | போர்ப் பணி |
| Jawans market | படைவீரர் அங்காடி |
| Denotified route | நீக்கப்பட்ட தடம் |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2055, விடை (வைகாசி)
சூன் – 2024

ஆசிரியர் : திருமதி **க. பவானி**
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com



ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

"தமிழ்... தமிழ்... என்று சொல்றீங்களே. தமிழில் அப்படி என்ன இருக்கிறது?" என்று சிலர் கேட்கிறார்கள். அவர்களிடமெல்லாம் நாம் திருப்பிக் கேட்க வேண்டியது "தமிழில் என்ன இல்லை?" என்பது தான். தாய்த்தமிழின் சொல்லாழம் புரிந்தவர்களுக்கு உலகமே இன்பத்தின் இருப்பிடமாய்த் தெரியும். தமிழில் ஒரு சொல்லை வைத்துக்கொண்டுகூட மிக நுட்பமான செய்திகளை நயம்படச் சொல்லிவிட முடியும். சான்றுக்கு, அண்மையில் நான் கட்செவியில் படித்துச் சுவைத்த, தமிழன்பர் ஒருவர் எழுதிய செய்தியை இங்கே பகிர்ந்துகொள்கிறேன்.

"தமிழிறிஞர் ஒருவரைச் சந்திக்க இன்னொரு தமிழறிஞர் அவர் வீட்டுக்குச் சென்றார். தன் வீட்டுக்கு வந்த தமிழறிஞரை வரவேற்று நலம் விசாரித்தார்.

இருவரும் நீண்ட நேரம் உரையாடிக்கொண்டு இருந்தனர். வீட்டில் இருந்த தமிழறிஞர் தன் மகளை அழைத்து, "அம்மா! ஐயா வந்திருக்கிறார். ஐயாவுக்கு ஒன்பது தர வேண்டும். ஏற்பாடு செய் " என்றார்.
அது என்ன ஒன்பது? தமிழறிஞரின் மகளுக்கும் விளங்கவில்லை. விருந்தினராக வந்திருந்த தமிழறிஞர்க்கும் விளங்கவில்லை. சிறிது நேர ஆராய்ச்சிக்குப் பின்பு, 'ஒன்பது' என்பது எதைக் குறிக்கிறது என்பதைப் புரிந்துகொண்ட தமிழறிஞரின் மகள் " ஏற்பாடு செய்கிறேன் தந்தையே " என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றுவிட்டாள்.

விருந்தினராக வந்திருந்த தமிழறிஞர்க்குக் கடைசிவரை ஒன்றும் விளங்கவில்லை. பல கோணத்தில் யோசித்துப் பார்த்துவிட்டு ஒரு வழியாக ' ஒன்பது ' என்ற சொல் எதைக் குறிக்கிறது என்பதைப் புரிந்து கொண்டார்.
"ஐயா, தங்கள் மகளைக் கொஞ்சம் கூப்பிடுங்கள். அவரிடம் ஒரு செய்தி சொல்ல வேண்டும் " என்றார்.

வீட்டில் இருந்த தமிழறிஞர் தன் மகளை அழைத்தார்.
எதிரே வந்து நின்ற அவர் மகளைப் பார்த்து " அம்மா! நான் இயோது தொண்ணூற்று ஐந்துடன் இருப்பதால் எனக்கு ஒன்பது வேண்டாம் " என்றார் விருந்தினராக வந்த தமிழறிஞர் .

அது என்ன தொண்ணூற்று ஐந்து?

தமிழறிஞரின் மகள் குழப்பத்தில் ஆழ்ந்தாள். சிறிது நேர யோசனைக்குப் பின்பு " தொண்ணூற்று ஐந்து " என்று அவர் எதைக் கூறினார் என்பதை உணர்ந்து கொண்டார். " சரி ஐயா, அவ்வாறே ஆகட்டும் " என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றுவிட்டாள்.

வழக்கம்போல், தமிழறிஞர் இருவரும் சிறுது நேரம் உரையாடினார்கள். அதன்பின்பு விருந்தினராக வந்த தமிழறிஞர் விடைபெற்றுச் சென்றார்.

இத்துடன் கதை முடிந்தது. அது என்ன ஒன்பது, தொண்ணூற்று ஐந்து?

திருக்குறளில் ஒன்பதாவது அதிகாரம் " விருந்து "
தொண்ணூற்று ஐந்தாவது அதிகாரம் " மருந்து "

இப்போது கதையை மறுபடியும் வாசியுங்கள்.

வீட்டில் இருந்த தமிழறிஞர், விருந்தினராக வந்த தமிழறிஞர்க்கு "விருந்தோம்பல் " செய்ய நினைக்கிறார். அதை தன் மகளிடம், "ஐயாவுக்கு ஒன்பது ( விருந்து) தரவேண்டும் " என்று குறிப்பால் உணர்த்துகிறார்.
விருந்தினராக வந்த தமிழறிஞர், இந்தக் குறிப்பை உணர்ந்து கொள்கிறார். "தான் தொண்ணூற்று ஐந்துடன் ( மருந்து) இருப்பதால் எனக்கு ஒன்பது ( விருந்து) வேண்டாம் " என மறுக்கிறார். அதாவது, அவருடைய உடற்பிணி காரணமாக நாட்டு மருந்து உண்டு வருகிறார். அதனால் அவர் பத்திய ( உப்பு, புளி, காரம் இல்லாத) உணவுதான் உண்ண வேண்டும். விருந்து உண்ண முடியாது. ஆதலால், அவர் ஒன்பது ( விருந்து) வேண்டாம் என்று சொல்லிவிட்டுச் சென்றுவிட்டார்.

இப்போது புரிந்ததா தாய்த்தமிழின் அருமையும் செழுமையும். இனியேனும் தாய்த்தமிழைப் போற்றிப் படிக்க இளைய தலைமுறைக்கு எடுத்துச்சொல்வோம். தமிழால் வெல்வோம்.

# உலகம் பரவிய புதுமிகள்



**இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா

மாந்த அறிவியல் வளர்ச்சிப் படிநிலையில் குமுக ஊடகச் செய்திப் பரிமாற்ற நுட்பச் செயலிகள் உருவாக்கம் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

இவ்வளர்ச்சிப் படிநிலையின் வெளிப்பாடுகளே வாட்சாப், தெலிகிராம், யூ டியுப், இன்சுதாகிராம் முதலானவையாகும். இச்செயலிகள் புத்துலகக் கண்டுபிடிப்புகள். இவற்றைப் பயன்படுத்தி எல்லா நாட்டு மக்களும், எல்லா இனத்து மக்களும் தங்கள் மொழிவழிக் கருத்துப் பரிமாற்றங்களைச் செய்து வருகின்றனர். இவை இக்காலத்தில் இன்றியமையாத் தேவையாகவும் மாறிவிட்டன.

இத்தகு இன்றியமையாச் சூழலில் இக்குமுக ஊடகங்களைத் தமிழில் பெயரிட்டு அழைக்கும் பணியும் தமிழ் உணர்வாளர்களால் செய்யப்பட்டு வருவதை நாம் மறுக்க முடியாது. மலேசியாவில் 2016 ஆம் ஆண்டு தனித்தமிழியக்க நூற்றாண்டு விழா சிறப்பான முறையில் நிகழ்த்தப் பெற்றது. 1916 ஆம் ஆண்டு மறைமலையடிகளாரும் அவர்தம் மகளார் நீலாம்பிகையாரும் மேற்கொண்ட சூளுரைப்பால் எங்கும் எதிலும் தூயதமிழ் பேணும் பரப்புரை இயக்கம் பல்கிப் பெருகியது. இச்சூளுரைப்பு நிகழ்த்தப்பெற்று நூறாண்டுகள் நிறைவடைந்ததை முன்னிட்டு மலேசியாவில் மலேசியத் தமிழ்நெறிக் கழகத்தின் தலைமையில் தனித்தமிழியக்க நூற்றாண்டு விழா நிகழ்த்தப் பெற்றது.

இந்நூற்றாண்டு விழாவின் சிறப்பு அடையாளமாகவும் படைப்பாகவும் வெளியிடப்பெற்றவையே காலத் தேவையாக அமைந்த குமுக ஊடகப் பெயர் கலைச்சொற்களாகும். அவ்விழாவில் அழகாக வடிவமைக்கப் பெற்ற நூற்குறிப்பட்டையில் இக்கலைச்சொற் பட்டியல் அச்சடிக்கப்பெற்று அனைவருக்கும் வழங்கப்பெற்றது.

அத்துடன் நில்லாமல் இக்கலைச்சொல் பட்டியல் ஓம் தமிழ் ஊடக நிறுவனப் பொறுப்பாளரும் கணினியியல் அறிஞருமாகிய தமிழ்த்திரு முகிலன் அவர்களால் முதன்முறையாக இணையத் தளப் பக்கங்களில் பரப்பப்பட்டது.

அப்பட்டியலில் இடம்பெற்ற கலைச்சொற்கள் :

1.WhatsApp – புலனம்
2. YouTube – வலையொளி
3. Instagram – படவரி
4. WeChat – அளாவி
5.Messenger – பற்றியம்
6.Twitter – கீச்சகம்
7.Telegram – தொலைவரி
8. Skype – காயலை
9.Bluetooth – ஊடலை
10.WiFi – அருகலை
11.Hotspot – பகிரலை
12.Broadband – ஆலலை
13.Online – இயங்கலை
14.Offline – முடக்கலை
15.Thumb Drive – விரலி
16.Hard Disk – வன்தட்டு
17.GPS – தடங்காட்டி
18.CCTV– மறைகாணி
19.OCR – எழுத்துணரி
20 LED – ஒளிர்விமுனை
21.3D – முத்திரட்சி
22.2D – இருதிரட்சி
23.Projector – ஒளிவீச்சி
24.Printer – அச்சுப்பொறி
25.Scanner – வருடி
26.Smart Phone – திறன்பேசி
27.Simcard – செறிவட்டை
28.Charger – மின்னூக்கி
29.Digital – எண்மின்
30.Cyber – மின்வெளி
31.Router – திசைவி
32.Selfie – தம் படம் / தம்மி
33 Thumbnail – சிறுபடம்/ முகமி
34.Meme – போன்மி
35.Print Screen – திரைப் பிடிப்பு
36.Inket – மைவீச்சு
37.Laser – சீரொளி

இவற்றுள் ஓரிரு சொற்களைத் தவிர மற்றவை அனைத்தும் எம்மால் 2015 ஆம் ஆண்டு முதலாக உருவாக்கப்பட்டவையே.

இப்பட்டியல் வெளியிடப்பட்டதும் தூயதமிழ் உணர்வாளர்கள் பெரிதும் மகிழ்ந்து வரவேற்றுப் போற்றினர். தங்களின் அன்றாட வாழ்வியலிலும் பயன்படுத்தத் தொடங்கினர்.

சிலர் இவற்றுள் பலவன நிறுவனப் பெயராக உள்ளமையால், சிறப்புப் பெயர்களை மாற்றாமல் அப்படியே மூல மொழியிலேயே அழைக்கப் பெறல் வேண்டும் என வலியுறுத்தினர். இருப்பினும் இச்செயலிகள் தமிழில் பெருவழக்காய்ப் பயன்படுத்தப்படுகின்றமையால் இவற்றுக்குத் தமிழ்ப்பெயரிட்டு அழைக்க வேண்டுவது தமிழ் நலனைக் காப்பதற்குரிய பெருந்தேவையாக இருந்தது. இதன் நிமித்தமாகவே தமிழ் உணர்வாளர்கள் பல்வேறு எதிர்கருத்துகள் வழங்கப்பட்டாலும் தமிழ்ப்பெயரிட்டு அழைப்பதில் உறுதியாக இருந்தனர்.

இப்பட்டியலில் டிக் டாக் (Tik Tok ) எனுஞ் செயலியின் பெயர் இடம்பெறவில்லை. இப்பட்டியல் உருவாக்கப்பட்ட காலத்தில் 2016 ஆம் ஆண்டு செபுதம்பர் திங்கள் தான் இச்செயலி சீனாவில் அறிமுகப்பட்டது. சீன மொழியில் இதற்கு அவர்கள் இட்ட பெயர், தோயின் ( Douyin ) என்பதாகும். இதற்கு அதிர்வொலி எனப் பொருள். இக்கால் தோயின் சீனாவில் தனித்து இயங்கும் செயலியாகவும் டிக் டாக் உலக அளவில் இயங்கும் செயலியாகவும் ஆகிவிட்டன. தமிழில் இதற்கான தமிழ்ப்பெயரினை விழைந்த வேளை, சுருக்கமாகவும் துணுக்காகவும் ஒலி ஒளிச் செய்திகளைப் பகிரப் பயன்படுகின்ற கரணியத்தால் துணுக்காடல் எனும் பெயரினை நான் வழங்கினேன். இக்கால் இச்சொல் படிப்படியாகப் பயன்பாட்டுக்கு வரத் தொடங்கியுள்ளது.

இச்செயலிகளின் பெயர்களைக் கூடுமானவரை நேரடி மொழிப்பெயர்ப்பாக இல்லாமல் அவற்றின் முதன்மைச் செயற்பாட்டையும் கருத்தில் கொண்டே நான் அமைத்தேன். சிலவன ஒப்பொலிச் சொல்லாக்க முறையில் அமைக்கப்பெற்றன.

இவ்வாக்கங்களின் வெற்றி மக்களின் பயன்பாட்டில் மட்டுமே அடங்கியுள்ளதை நான் அறிவேன். எனினும் இவ்வற்றுக்கான தேவை வருகின்ற வேளை நம் ஆக்கங்கள் எற்புடையனவாக இருக்கும் நிலையில் பயன்பாட்டுக்குப் பெருந்துணை புரியும் என்பதே எம் எண்ணம். இவ்வாறு வழங்கப்பெற்ற சொற்கள் பலவற்றைத் தமிழ் நாட்டு அரசின் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் ஆய்வுக்குழு கலந்தாய்வுக்குக் கொணர்ந்து தெளிந்து தெரிந்தெடுத்து சொற்குவைப் பட்டியலில் இடம்பெறச் செய்ததும் போற்றுதலுகுரியதாகும். இதனைத் தமிழ் நாட்டு அரசறிக்கையிலும் சொல்லப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

" தமிழ் மொழிக்குப் பெருமை சேர்ப்பது அதன் சொல்வளமே ஆகும். தமிழில் வழங்கும் அனைத்து சொற்களையும் திரட்டி ஒரே தளத்தில் நிரல்படுத்தி வழங்கும் சொற்குவை எனும் திட்டம் இன்று அரசால் வெற்றிகரமாகச் செயற்பாட்டில் உள்ளது. இதன் மூலம் புதிய அறிவியல் காலத்தில் பயன்பாட்டில் உள்ள வாட்சாப் என்பதற்குப் புலனம் என்றும் Wi- fi அருகலை என்றும் பிறமொழிச் சொற்களுக்கும் சரியான தமிழ்ச்சொற்களைத் தரப்படுத்தப்பட்டு பொதுமக்களுக்குப் பல வழிமுறைகளில் தெரிவிக்கப்படுகின்றன.

( பக்கம் 9 , அறி.எண் : 744)

இவ்வாறு அமைக்கப்பெற்ற சில சொற்களையும் விளக்கங்களையும் நாம் மேலும் காணலாம்.

### புலனம்

புலனம் எனும் சொல் வாட்சாப் ( WhatsApp) எனும் செயலிக்கான தமிழ்ப்பெயராக இக்கால் பலரால் வழங்கப்படுகின்றது. இச்சொல்லுக்குக் கட்செவி, என்னாப்பு, என்னேவி, பகிரி என ஏனைய சொற்களும் வழங்கப்படுகின்றன. ஒப்பீட்டளவில் புலனம் எனுஞ் சொல்லே பரவலாக வழங்கப்படுவதாக அறிகின்றோம். இச்சொல் மலேசியாவில் பாட நூல் அளவிலும் பயன்பாட்டிற்கு வந்து விட்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும். தமிழ் நாட்டு அரசு சார் அமைப்புகளின் அறிவிப்புகள், அறிக்கைகள், விளம்பரங்கள் முதலாவற்றிலும் இச்சொல் பயன்பாட்டைக் காணக்கூடியதாய் உள்ளது. புலனம் எனும் பெயரில் குறும்படங்களும் சிறுகதைகளும் படைக்கப்பெற்று உலாவந்து கொண்டுள்ளன. இதனையும் இதுபோன்ற வேறு சில சொற்களையும் கல்லூரி, பல்கலைக்கழக

மாணவரிடையே கேட்டுப் பதிவிட்ட வலையொளி ஊடகங்களை நான் பெரிதும் பாராட்டுகின்றேன்.

இச்சொல் உண்மையில் செய்தியைக் குறிக்கும் பழைய சொல்லே. பாவாணரும் புலனம், பற்றியம் எனச் செய்தியைக் குறிக்க குறித்துள்ளார் என்பதும் குறிப்பிடத்தக்கது. இச்சொல்லைப் பகுப்பாய்வு செய்தால் இதன் அடிச்சொல் புலன் என அமையும். புலன் + அம் , புலனம் என்றாகும். புலன் , புலம் என்றும் ஆகும். புலம் என்பதற்கு அறிவு , மண், சேர்வு எனப் பொருள்கள் உள்ளன. உல் > சேர்தல் கருத்து வேர். உல் > புல்> புலம் = சேர்ந்து பிணைந்திருக்கும் மண்; செம்புலப் பெயல் ( குறுந்தொகை ) , அதே வேளை துளைத்தல் பொருள் கருத்தினையும் வழங்கும். உல் = துளைத்தல், பிளத்தல் கருத்து வேர், உல் > புல்> துளைத்தலால் பிளத்தல். புல்> பிள் > பிளவு, புல்> புலர் = இருளைப் பிளத்தலால் நிகழ்ந்த விடியல், புல்> புலம் = இருள் எனும் அறியாமையை விலக்கும் அறிவொளி , புல்> புலம் > புலமை= அறிவு, புல்> புலவர் = அறிவுடைய பெருமக்கள். புலம்> புலன் => ஐம்புலன் = ஐம்பொறிகள் வழிப் பெறப்படும் அறிவு. புலப்பாடு = அறிவுத் தெளிவு; புல்> புலன் + அம் = > புலனம் = அறிவுசார் செய்தி, அறிவுசார் செய்தியைப் பரப்பும் செயலி. இக்கால் உருவாக்கப் பெற்றுப் பயன்பாட்டில் உள்ள வாட்சாப் எனும் செயலிக்குச் செய்திகளைப் பரிமாறிக் கொள்கின்றமையால் புலனம் எனும் செய்தியைக் குறிக்கும் சொல்லை ஆகுபெயராய்ப் பொருத்தி அமைக்கப்பெற்று வழக்கில் கொணரப்பெற்றது.

ஆலலை

அகண்ட அலை வரிசை எனும் தொடரின் தனிச்சொல் வடிவே ஆலலை ஆகும். Broadband என்பதையே அகண்ட அலை வரிசை என்கின்றனர். இது தொடரே ஒழிய சொல்லன்று. அகல் எனின் விரிந்தது எனப் பொருள். எனவே அகல் அலை > அகலலை எனச் சுருக்கிச் சொல்லலாம். தமிழில் பகல் > பால் எனவும் துகள்> தூள் எனவும், மகன்> மான் எனவும் மகள்> மாள் எனவும் திரிந்தமைதல் போல் அகல், ஆல் எனத் திரியும் ; அகல மரமே ஆல மரமாயிற்று என்பார் பாவாணர். இந்நெறிமுறையின் அடிப்படையிலேயே அகலலை > ஆலலை என மேலும் சுருக்கி அமைக்கப் பெற்றது. இதுவும் இக்கால் அரசு பணிமனைகளில் வழங்கப்படுகின்றது.

வலையொளி

YouTube = வலையொளி > ஒளியலையை முதன்மையாய் அமைத்து உருவாக்கப்பட்ட வலைத்தளச் செயலி என்பதால் இதற்கு வலையொளி என வழங்கப்பெற்றது. இக்கால் பலரும் இச்சொல்லை வழக்காற்றில் கொணர்ந்தது பெருமகிழ்ச்சியே. சிலர் இதனை உன்குழல் எனப் பகடியாய்ச் சொல்வர். இதுவும் சிறப்புப் பெயரே. இருப்பினும் தமிழில் சொல்கையில் அதன் இனிமையும் பொருளும் சிறப்புற்றமைவதை எளிமையில் உணரலாம். வேறுவகை செயலிகளில் இவ்வடிவில் இருப்பினும் வலையொளி எனுஞ் சொல் பலரின் தொடர்புசார் வழக்காற்றில் வந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

பகிரலை

Hotspot= பகிரலை, ஒரு கைப்பேசியின் தரவினை ( data ) மற்றொரு கைப்பேசி அல்லது கணினிக்குப் பகிர்ந்தளிப்பதால் இதற்குப் பகிரலை என அமைக்கப் பெற்றது. இதன் பயன்பாட்டுச் செயலைக் கருத்தில் கொண்டு இச்சொல் அமைக்கப்பட்டது.

ஊடலை

Bluetooth = ஊடலை , ஒரு கைப்பேசியின் ஒலி, ஒளி, அலைகளை மற்றொரு கைப்பேசிக்கோ வேறு கருவிகளுக்கோ ஊடு செய்தனுப்புதலையே ஊடலை என்கின்றோம். இச்செயலியின் சரியான பொருளை ஊடலை எனுஞ் சொல்லே வழங்குவது இதனால் பெறப்படும். ஊடு + அலை = ஊடலை. புளூதூத் நீலப்பல் எனும் பொருளையே உணர்த்தும். இது சிறப்புப் பெயர் என்பதால் யாரும் வினா எழுப்பாமல் அப்படியே ஏற்றுள்ளனர். இருப்பினும் தமிழ்வழக்கே மிகவும் பொருத்தப்பாடு உடையதாக விளங்குவதைத் தெளிவாய் உணரலாம்.

அருகலை

புதிய நுட்பியல் தொடர்பு அணுக்கங்களில் Wi Fi வை ஃபை என்பதும் இன்றியமையாத ஒன்றாகும். இக்கால் அரசு, தனியார் அலுவலகங்களில் இதன் பயன்பாடு

தவிர்க்கமுடியாத ஒன்றாகும். இதன் வாயிலாகக் கம்பி இணைப்புத் தொர்பில்லாமல் குறிப்பிட்ட அருகெல்லை வரை அலைமுறையில் இணைய இணைப்பு ஏந்தினைப் பெற்றுக் கொள்ள முடியுமாதலால் அதன் செயற்பாட்டை உணர்ந்து அருகலை எனும் சொல்லை நான் படைத்தேன். அருகு + அலை = அருகலை என்றாகும். இச்சொல்லும் கல்வி நிலையங்களிலும் அரசு அலுவலகங்களிலும் பயன்பாட்டுக்குரிய சொல்லாகவிருப்பது போற்றுதற்குரிய ஒன்றாகும். பல்வகை மின்னியக்கக் கருவிகளை அருகலையைக் கொண்டு இயக்கவும் இணைய ஏந்துகளைப் பெற முடியுமாதலால் அருகலை இக்கால் இன்றியமையாத் தேவையாகிவிட்டது என்பதை மறுக்க முடியாது.

தொலைவரி

தெலிகிராம் telegram எனுஞ் சொல்லுக்கான தமிழ்ச்சொல் தொலைவரி என்பதே. இச்சொல் செயலி உருவாக்கத்திற்கு முன்பதாகவே பயன்பாட்டில் உள்ள சொல்லே. தொடர்பு ஏந்துகள் இல்லா காலத்தில் செய்திகளைப் பரிமாறிக் கொள்ள இக்கருவி கண்டுபிடிக்கப்பட்டது. பிற்காலத்தில் செய்தி பரிமாற்றத்திற்குரிய செயலிக்கு இப்பெயர் இடப்பட்டது. 2013 ஆம் ஆண்டு இச்செயலி அறிமுகப்படுத்தப்பட்டது. தொலைவரி எனும் முந்தைய பெயரே இச்செயலிக்கும் எவ்வொரு மாற்றமும் இல்லாமல் அப்படியே ஆளப்பெற்றது.

காயலை

Skype எனும் தொடர்புச் செயலிக்கு இடப்பட்ட பெயரே காயலை என்பதாகும். Sky என்பது காயம் எனும் தமிழ்ச்சொல்லின் திரிபு என்பார் பாவாணர். உல் எனும் கருமைப் பொருள் வேரினின்றே காயம் உருவாகியது. உல் > குல்> கல்> கர் > கரி = கருமை. குல் > கல்> கய் > கயம் = கரிய யானை. குல் > கல்> கால்> காயம் = கரிய வான். காயம் > ஆகாயம். காயம் > sky. வானலை வழி நண்பருக்குள் செய்தி பரிமாற்றம் செய்து கொள்வாரை வானலையர் அல்லது காயலையர் என்பர். Skyper என இவர்களை அழைத்துள்ளனர். ஆங்கிலத்தில் ரகர r பின்னொட்டு மறைந்து இச்சொல் skype எனக் குறுக்கப்பட்டது.

இச்செயலி 2003 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது. Sky காய் என்பதன் திரிபாதலால், காய் + அலை = காயலை என இதற்குச் சொல்லமைக்கப்பெற்றது.

படவரி

இயங்கும் இயங்காப் படத்துண்டுகளை வைத்து செய்தி பகிர துணை புரிகின்றமையால் instagram படவரி எனப்பட்டது. இதுவும் ஒரு சிறப்புப் பெயரே. இருப்பினும் தமிழ் நலம் கருதி படவரி எந்த் தமிழில் ஆக்கம் செய்யப்பெற்றது. 2010 ஆண்டு இச்செயலி அறிமுகப்படுத்தப்பட்டு பின்னர் மேம்படுத்தப்பட்டது என்பர். இக்கால் படவரி எனுஞ் சொல்லும் பாட நூல்களில் பயின்று வருவது குறிப்பிடத்தக்கது.

மேற்கண்ட சொற்களோடு அளவளாவுதற்குப் பயன்படுகின்றமையால் wecahat அளாவி என்றும், செய்திக்குப் பற்றியம் எனும் மற்றொரு சொல்லும் தமிழில் பயில்கின்றமையால் செய்திப் பரிமாற்றத்திற்குரிய messenger எனும் செயலிக்குப் பற்றியம் எனும் சொல்லையும் நான் புத்தாக்கம் செய்துள்ளேன்.

இச்சொற்களை ஆர்வங்கொண்டு குமுக ஊடகங்களில் இளையத் தலைமுறையினர் பரப்பிப் பெருந்துணைப்புரிந்தனர்.

புத்துலகக் காலத்தில் புதுப்புது வரவுகள் அறிவியல் வளர்ச்சியால் மாந்தத் தேவைக்காக உருவாக்கம் பெறுவது இயல்பே. இது காலந்தோறும் நிகழ்ந்துகொண்டே இருக்கும். இவை தமிழரால் கண்டுபிடிக்கப்பட்டவையாக இருக்கா. எனவே அவற்றின் பெயர்களும் தமிழில் இரா. இவ்வாறான தமிழல்லாக் கருவிப்பெயர்களை அப்படியே தமிழில் ஆள்வதினின்றும் அவற்றுக்குரிய தமிழ்ச்சொற்களைக் கண்டறிந்து தொகுப்பதும் பயன்பாட்டுக்குக் கொணர்வதுமே தமிழ் நலத்திற்குரிய செயலாக விளங்கும். துறையறிவு மிக்காரும் தமிழறிவு மிக்காரும் காலத் தேவையை உணர்ந்து ஒருவரை ஒருவர் அந்தண்மையொடு பணிந்தும் போற்றியும் தமிழுக்கு ஆக்கம் புரிவராயின் தமிழ் காவலராய் என்றும் போற்றப்படுவார்.

"தமிழயரத் தாழ்ந்தான் தமிழன் – அவனே
தமிழுயர தானுயர்வான் தான்".

( பாவாணர்)

# மொழிக்கல்வியும் மதிப்பீடுகளும்

பேரா. முனைவர் தொ. பரமசிவன்
தமிழ்ப் பண்பாட்டு ஆய்வறிஞர்



(அரசு வெளியீடான பிள்ளைத்தமிழ் நூலில் இடம்பெற்ற நேர்காணல் கட்டுரை
சந்திப்பு : வ. கீதா, கோ. பழனி)

வேறுபட்ட மொழிக்கல்வியின் அடிப்படைகள், அதன் உட்கூறுகள். அதைக் கற்பிக்க வேண்டியதன் தேவை, நியாயம், வழக்கிலுள்ள மொழிக்கல்வியின் தன்மை, அதன் வரம்புகள் ஆகியவற்றைக் குறித்து மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தின் முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் தொ. பரமசிவன் அவர்களுடன் உரையாடினோம். மொழிக்கல்வி குறித்து நாம் வித்தியாசமாகச் சிந்திக்க, செயல்பட அவரது கருத்துகள் உதவியாகயிருக்கும்.

**மொழிக்கல்விக்குரிய மொழி ஏதாவது உண்டா? இன்னவகையான மொழிதான் பயிற்றுவிக்கப்பட வேண்டும் என்று சொல்வது சரியாகுமா?**

மொழிக்கல்வி என்பது குழந்தைமொழியைச் சார்ந்திருப்பது முக்கியம். எது குழந்தைமொழி என்றால், குழந்தை புழங்குகின்ற மொழியெல்லாம் குழந்தை மொழிதான்.

தகுதி வழக்கு, இயல்பு வழக்கு என்கிற வேறுபாடு குழந்தைகளுக்குப் புரியாது. தகுதி வழக்கு, இயல்பு வழக்கு என்பதன் வேறுபாடுகளைக் குழந்தைக்குப் புரியவைப்பதென்பது எளிதல்ல. அவற்றை வீட்டிலே குழந்தைகள் பெற்றோர்களின் கண்டிப்பின் மூலமாகக் கற்றுக்கொண்டிருக்கின்றனர். வேண்டுமானால் அதையும் கற்றுக்கொடுக்க வேண்டும். எப்போது என்றால், ஒரு பதினைந்து வயது ஆன பிறகு. குழந்தை எந்த மொழியைத் தெரிந்து கொள்ள வேண்டும்? எந்த மொழியைத் தெரிந்து கொண்டிருக்கிறது? இரண்டுக்கும் இடையேயான இடைவெளி என்ன? இந்த இடை வெளியை எப்படி இட்டு நிரப்புவது? அதைப் படிப்படியாகத்தான் செய்யவேண்டும்.

ஆனால் மொழிக்கல்வியைத் திட்டமிடுவோர் இவற்றையெல்லாம் கவனத்தில் கொள்வதில்லை. முதலில் குழந்தைக்கு ஏற்கெனவே வாய்த்துள்ள மொழி அறிவை அவர்கள் கருத்தில் கொள்ள வேண்டும். காரணம், பள்ளிக்கு வரும்போதே குழந்தை பேசத் தெரிந்த குழந்தையாகத்தான் வருகிறது. அதனுடைய மூளைக்குள்ளே சொல் தொகுதிகள் இருக்கின்றன. பள்ளிக்கு வருகிறபோது பிள்ளைகள் அறிந்திருக்கின்ற சொற்களின் அளவு, நகர்ப்புறத்தைவிட கிராமப்புறங்களில் கூடவாகவும், கிராமப்புறங்களிலும்கூட வசதியான வீட்டுப்பிள்ளைகளைவிட வசதி குறைவான வீட்டுப் பிள்ளைகளின் சொல்தொகுதி அதிகமாகவும் இருக்கிறது என்பது நடைமுறை உண்மை. ஆனால் இந்தச் சொல்தொகுதி எல்லாம் இப்போதுள்ள பாடத் திட்டத்திற்குள்ளே வந்துள்ளதா?

மேலும் மொழியைப் பொறுத்தமட்டிலே, பள்ளிக்கு வருவதற்கு முன்பே பிள்ளைகள் கதை கேட்க ஆரம்பித்து விடுகிறார்கள். பாட்டுப் பாட ஆரம்பித்து விடுகிறார்கள். இதுபோன்ற குழந்தைகளுக்குச் செய்யத் தெரிந்த விசயங்களை வளர்த்தெடுக்கிற முறையிலே நாம் போதித்திருக்கிறோமா? இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். குறிப்பாக, குழந்தைகளுக்கு

மிக எளிதாகப் பிடிபடும் இசையுடன் கூடிய மொழியை நாம் பயிற்றுவிப்பதில்லை. எனக்கு 'அ'னா கற்றுக்கொடுத்தபோது இராகம் போட்டுத் தான் சொல்லித் தந்தார்கள். பன்னிரண்டு உயிர் எழுத்துகளையும் பாடலாக அவர்கள் கற்றுத்தருகிறபோது அது வரிசை மாறாது. ஒரு திரைப்படப் பாடலைத் கற்கிற குழந்தை, கிட்டத்தட்ட அறுபது எழுபது சொற்கள் அடங்கிய பத்து வரிகளை அப்படியே சொல்கிறது. ஆனால் 'அ'னா, 'ஆ'வன்னாவைச் சொல்லச் சொன்னால் அது குழம்புகிறது. ஏன்?

இசையோடு அந்த விஷயத்தைக் கற்பிக்க வேண்டும். நம்முடைய மொழிக்கும் இசைக்கும் உரிய முக்கியமான விசயம் என்னவென்று கேட்டால், இந்த மொழியுடைய ஒலித்திரள்கள் இசையோடு கட்டமைக்கப்பட்டவை. மூன்று மாத்திரை அளவில் தமிழிலே ஒரு எழுத்து கிடையாது என்பது இந்த இசைத் தமிழினுடைய அடிப்படை 'அ'னா ஒரு மாத்திரை. ஆவன்னா இரண்டு மாத்திரை. ஆ... என்று நீட்டிச் சொல்லிவிட்டால். அங்கே மொழி இசைபடுகிறது என்று சொல்கிறார்கள். தமிழ் இலக்கணிகள் 'ம்ம்ம்... 'எனச் சொன்னால் அது இயல் தமிழ் அல்ல. இசைத் தமிழின் கூறு சேர்ந்து விடுகிறது என்கிறார்கள்.

மனித உடம்பும் மனித நரம்பும் மனித உயிர்ப்பும் இசையோடு பின்னப்பட்டதனாலேயே இசையில்லாமல் "அ ஆ இ ஈ" என்று கற்றுக்கொடுக்கிறபோது ஒலித்திரள்களைக் கற்றுக்கொள்ள இயலாத நிலைக்குக் குழந்தை போகிறது. அது மட்டுமன்று. பாரம்பரியமான மனித உடம்போடும் உயிரோடும் பின்னப்பட்ட இசை உணர்வையும் அது இழந்து போய்விடுகிறது. இந்த நுட்பமான வேர்களைக் குழந்தைகளின் மனத்திலிருந்து நாம் அறுத்துவிடுகிறோம்.

நான் தொடக்கப் பள்ளியில் படித்து இத்தனை ஆண்டுகள் ஆனாலும் அந்தப் பாடங்களை என்னால் சொல்ல முடியும். அதேபோல எனக்கு நன்றாக நினைவிருக்கிறது, ஐந்தாம் வகுப்பிலே வியாகப்பன் என்றொரு ஆசிரியர் இருந்தார். முக்கூடற்பள்ளிலே உள்ள பாட்டைச் சொல்லித் தருவார்.

"ஆற்றுவெள்ளம் நாளை வரத் தோற்றுதே குறி
மலையாள மின்னல் ஈழ மின்னல் சூழ மின்னுதே
நேற்றும் இன்றும் கொம்புசுற்றிக் காற்றடிக்குதே
கேணி நீர்ப்படு சொறித்தவளை கூப்பிடுகுதே"

இந்தப் பாட்டுக்குள்ளே என்ன இருக்கிறது? உங்கள் மண் சார்ந்த, குறிப்பாக நெல்லை மண் சார்ந்த (அந்த இலக்கியம் இங்கே பிறந்தது) 'ஈக்கோ சிஸ்டம்' (Eco System) என்ன என்பதைக் கற்றுத் தருகிறது.

நம்மையறியாமலேயே உணவு சாப்பிடுகிறபோது, எப்படி நாம் நம் உயிருக்குத் தேவையான ஒன்றைச் சாப்பிடுகிறோம் என்ற தன்னுணர்வு இல்லாமலே சாப்பிடுகிறோமோ அதுபோல, இந்தப் பாட்டைக் கற்கிறபோது இந்த மண்ணினுடைய ஈக்கோ சிஸ்டம் என்ன? இந்த மண்ணின் பருவகாலம் எப்படி அமையும்? நாளை மழை வரும் என்றால் இன்றைக்கு 'ஈகோ சிஸ்டம்' என்னவாக இருக்கும்? கிணற்றில் தவளை கூப்பிடும். மேலும்,

"சேற்று நண்டு சேற்றில் வளை ஏற்றடைக்குதே
மழைதேடி ஒரு கோடிவானம் பாடி ஆடுதே"

என்று வரும்.

இன்றைக்கும் அதுதான். இங்கே பாரம்பரியமான தொழில்நுட்ப அறிவு புதைந்து கிடக்கிறது. அதாவது. செய்து செய்து பழக்கப்பட்டு, மண்ணிலிருந்தும் பிற உயிர்களிலிருந்தும் தாவரங்களிலிருந்தும் நாம் பெறக் கூடியது இந்த அறிவுத் தொகுதி. இது சின்ன குழந்தைக்கு ஏதேனும் ஒரு வகையில் தரப்பட வேண்டும். பாட்டாகவோ விளையாட்டாகவோ, எப்படியோ இது அவர்களைப் போய்ச் சேர வேண்டும்.

நமது மொழிக்குரிய கூட்டு அனுபவத்தின் சாரத்தைக் குழந்தைகளுக்கு வழங்கவேண்டும் என்று சொல்கிறீர்கள். அப்படித்தானே?"

ஆமாம். குழந்தைகளின் அனுபவ உலகம் இன்று சுருங்கித் கொண்டே வருகிறது. இதனை விரிவுப்படுத்த பல நிலைகளில் செயல்பட வேண்டும். மொழிப்பாடம் வகுப்பறையில் மட்டும் நடைபெற வேண்டியதில்லை. என்னுடைய மாணவர் வே. சங்கர்ராம் சங்கரன்கோவிலிலே தாய்த்தமிழ்ப் பள்ளி நடத்துகிறார். அந்தப் பள்ளியிலே வகுப்பறையும் விளையாட்டுத்திடலும் மட்டும் கல்விக்குரியதல்ல. குழந்தைகளைக் கிராமங்களுக்கு அழைத்துப் போகிறார்கள். ஒருமுறை பயணமாகக் குழந்தைகளைச் சுமார் பத்து கிலோமீட்டர் வேனில் அழைத்துச் செல்கிறார்கள். ஒரு தடவை போய்வருகின்றபோது, குழந்தைகள் துளசிச்செடியைப் பார்க்கிறார்கள். குத்துச் செடியைப் பார்க்கிறார்கள். எது புல் என்று தெரிகிறது; எது மேடு என்று தெரிகிறது; எது வரப்பு என்று தெரிகிறது.

அந்த ஒரு மணிநேர அனுபவத்திலே நிறைய சொற்களைக் குழந்தைகள் கற்றுக்கொள்கிறார்கள். காரணம், மொழிக்கல்வி என்பது வெறும் ஒலித்திரள்களின் கல்வி அன்று. அது குழந்தைகளின் அனுபவ உலகம் சார்ந்த விசயம். குழந்தைகளின் அனுபவ உலகம் விரிவுபடும்போது மொழிக்கல்வியும் விரிவடைகிறது.

குழந்தைகளது அனுபவ உலகம் பயணங்களின்போதுதான் மிகப்பெரிய அளவில் விரிவடைகிறது. என்றாலும், வேறு வகை களிலும் இதைச் செய்யலாம். அடுத்த பொருளாதாரத் தளத்திலே உள்ள குழந்தைகளுடன் உறவாடச் செய்வதன்மூலம் குழந்தையின் அனுபல உலகம் ஆழமடையும். சென்னை நகரத்துக் குழந்தைகள், சங்கரன் கோவில், குழத்தைகளோடு இரண்டு ஆட்டம் கபடி ஆடினால் சில புதுச் சொற்களைக் கற்றுக்கொள்வார்கள்.

நடைமுறையில் இது சாத்தியப்படுமா என்பதையும் நாம் ஆராய வேண்டும் அல்லவா?

வட்டார வேறுபாடுகளோடு சேர்ந்த ஒரு மொழிக்கல்வியின் மூலமாக இதைச் செய்யலாம். குழந்தைகளுக்குப் பல்வேறுவிதமான வாழ்க்கை முறைகளை அறிமுகப்படுத்த இது உதவும். ஆனால், வழக்கிலுள்ள கல்வி இவ்வாறு இல்லை. என்னுடைய பாடப் புத்தகத்திலே 'கிணறு' என்று இருக்கும். வட மாவட்டக் குழந்தைகள் இந்தச் சொல்லைக் கேட்டுத் திணறியிருப்பார்கள் என்பது இப்போது எனக்குத் தெரிகிறது. ஏனென்றால் அங்கே கேணி என்ற சொல்தான் உண்டு. கிணறு என்ற சொல் கிடையாது. மதுரை தாண்டி திண்டுக்கல் பக்கம் போகும்போதுதான் கிணறு, கேணி என்ற இரு சொற்களும் இருக்கின்றன. இரண்டிற்கும் நுட்பமான வேறுபாடு உண்டு. பொருள் வேறுபாடு இல்லாமல் ஒரு சொல் தோன்றாது. இந்த வேறுபாட்டைக் குழந்தைகள் அறிவது அவசியம்.

இதை இப்படிச் செய்யலாம். பள்ளிக்கூடம் எந்த மாவட்டத்தில் உள்ளதோ, அந்தப் பகுதிக்குரிய மொழியை முதலில் அறிமுகப்படுத்தலாம். பிறகு பிற பகுதிகளுக்குரிய சொற்களைக் கற்பிக்கலாம். உதாரணமாக, கோவை மாவட்டம் என்றால் பருத்தி, ஈரப்பதம் உள்ள காற்று போன்றவற்றுடன் தொடர்புடைய சொற்களை அறிமுகப்படுத்திய பிறகுதான் அந்தக் குழந்தைக்கு மதுரை பக்கச் சொற்கள் பற்றிய அறிமுகம் வேண்டும்.

வழக்காறுகளான கதைகள், பாட்டுகள், விடுகதைகள், பழமொழிகள் மூலம் வேறுபட்ட அனுபவங்களையும் அவற்றுக் குரிய சொற்களையும் அறிமுகப்படுத்தலாமா?

மொத்தத்தில் வட்டார வேறுபாடுகளை உள்ளடக்கிய ஒரு மொழிக்கல்வி அவசியம். ஏனென்றால், அந்த வட்டாரம் இல்லாமல் அந்த மனிதன் இல்லை. வட்டார வேறுபாடுகளை முற்றாக நிராகரிக்கும் ஒரு பொதுமொழியைக் கற்கும் நிலைமை பள்ளிக் குழந்தைகளுக்கு வரக்கூடாது.

**வட்டார வழக்குகளில் சாதி அதிகாரமும் சமயக்கூறுகளும் பால்நிலை வேறுபாடுகளும் மிக இயல்பாக இடம் பெற்றிருக் கின்றனவே?**

நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ அதிகாரம் சார்ந்து அல்லது சுரண்டல்சார்ந்து வருகின்ற சொற்களைக் கட்டாயம் அந்நியப்படுத்த வேண்டும். ஆனால் சாதி வழக்குகளில் இவை மட்டுமே இல்லை. தொழில் சார்ந்த அறிவும் அவற்றில் பொதிந்துள்ளது. குழந்தைகள் இந்த அறிவை மிக இயல்பாகவே தமதாக்கிக் கொள்கின்றனர். ஒரு தச்சர் வீட்டுக் குழந்தை படிக்க வரும்போது, அந்தக் குழந்தைக்குத் தச்சுவேலை செய்கிற கருவிகளுடைய வகைப்பாடும் அவற்றினுடைய பெயர்களும் தெரிந்திருக்கும். இது சுத்தியல், இது ஆப்பு, இது ஆப்புக்கு வைக்கிற உளி – ஆப்புளி, இது கொட்டப்புளி, இது இழைப்பு என்று, இந்த மாதிரியான கருவி அறிமுகமும் அவற்றினுடைய பெயர் அறிமுகமும் அவற்றினுடைய பயன்பாடும் அக்குழந்தைக்குத் தெரிந்திருக்கும். உழவர் வீட்டுக் குழந்தைக்கு உழவு சார்ந்த சொற்களும் அந்தக் கருவிகளின் பெயர்களும் தெரிந்திருக்கும். இவ்வாறாக, உழைப்பு தொடர்பாகக் குழந்தைகள் ஏற்கெனவே பெற்றுள்ள சொற்தொகையை நாம் கைவிட வேண்டியதில்லை.

பால் வேறுபாடுகளைப் பொறுத்தவரை, இவ்வேறுபாடுகள் காட்டாத சொற்களைத் தொடர்ந்து பயன்படுத்துவது அவசியம். பெண்கள் கல்லூரி முதல்வரை 'முதல்வர்' என்றுதான் சொல்கிறோம். தொடக்கத்திலேயே அந்தச் சொல்லைப் பழக்கத்திற்குக் கொண்டு வந்துவிட்டோம். ஏனென்றால், முதல்வி என்று சொன்னால், அது அவ்வளவு நன்றாக இல்லை. பேராசிரியை என்று சொல்வதே எனக்கு உடன்பாடில்லை. பேராசிரியர் என்று பால்காட்டாச் சொல்லாகத்தான் அதைப் பயன்படுத்த வேண்டும்.

**மொழிக்கல்வியில் வேறு சில பிரச்சினைகளும் உள்ளன. எடுத்துக்காட்டாக, குறிப்பிட்ட சமுதாயங்களுக்குரிய மொழியைக் 'கொச்சை' என்று சொல்லிப் புறந்தள்ளிவிடுகிறோம். அச்சமுதாயங்களைச் சேர்ந்த குழந்தைகள் பள்ளிக்கூடத்தில் பேசத்தயங்குவதையும் ஆசிரியர்கள் அவர்கள் பேசும் மொழியைப் பழிப்பதையும் கல்வி ஆய்வாளர்களில் சிலர் சுட்டிக் காட்டியுள்ளனர். இது பற்றி..?**

நம்முடைய பழைய இலக்கணங்களில் இவ்வாறு சொல்வதற்கான ஆதாரங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. தொல்காப்பியரை எடுத்துக்கொள்வோம். மொழிக்கு அதிகாரி மக்கள் என்பதிலே ரொம்ப அழுத்தமான கருத்துடையவர் அவர். எடுத்துக்காட்டாக, பெயர்ச்சொற்களை வகைப்படுத்துகின்ற போது. ஒரு இடத்திலே சொல்கின்றார். "கூடிவரும். வழக்கின் ஆடியது பெயர்" என்கிறார். இது என்னவென்று கேட்டால். பிள்ளைகள் விளையாடுகின்றபோது அணிகளுக்குப் பெயரிட்டுக் கொள்வார்கள் அல்லவா? இதையும் கணக்கிலே சேர்க்க வேண்டும் என்பது தொல்காப்பியர் கூற்று. நேரு அணி, காந்தி அணி. வள்ளுவர் அணி எனப் பள்ளிக்கூடத்திலே பிரித்துக் காட்டுவார்கள் அல்லவா? அதையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்கிறார். தொல்காப்பியர் தெளிவாக, முதன்மை தர வேண்டியது வழக்கு மொழிக்குத்தான், பேச்சு மொழிக்குத்தான் என்கிறார்.

எனவே, மக்கள் மொழி என்பது, அம்மக்களது சமுதாய நிலை என்னவாக இருந்தாலும் முதலானது, மேலும் பேச்சு மொழியிலிருந்துதான் எழுத்து மரபு கிடைத்தது. பேச்சு மொழியிலே ஒரு இலக்கணம் உண்டு. அந்த இலக்கணம்தான் எழுத்து மொழிக்குக் கொண்டுபோகப்பட்டதே தவிர, எழுத்துமொழியின் இலக்கணம் பேச்சு மொழிக்குக் கொண்டுபோகப்படவில்லை. எனவே பேசுகிற மனிதனே மொழிக்கு அதிகாரி. ஆசிரியர்களோ இலக்கண ஆசிரியர்களோ அல்ல. இன்னும் சொல்லப்போனால், இலக்கண மரபு என்பது உங்களுடைய உடம்பிற்குள்ளாக உங்களுடைய மூளைக்குள்ளாக இருக்கிறது. அதுதான் கொஞ்சம் திருந்திய வடிவத்திலே எழுத்தில் இருக்கிறது.

தொடர்ந்து மாற்றங்களுக்கு உள்ளாகும் பேச்சு மொழிதான் ஒரு மொழியின் வளர்ச்சிக்கு, பண்புக்கு ஆதாரம் என்றால், இரண்டாயிரம் ஆண்டுப் பாரம்பரியமிக்க தமிழ்மொழியில் ஏற்பட்டுள்ள மாற்றங்களை எவ்வாறு புரிந்துகொள்வது?

ஒரு சொல்லுக்கு ஒரு பொருள் என்பதே கிடையாது. ஒரு சொல்லுக்குக் காலம்தோறும் அனுபவம் சார்ந்து பொருள்கள் விரிவடைந்துகொண்டே வரும். இது ஒருபுறம், மறுபுறமாக, சொல்லை எந்தச் சூழலில் பயன்படுத்துகிறீர்களோ, அந்தச் சூழலில் அதற்குப் பொருள் வேறுபடும். இந்தக் கடிதத்தை இரண்டு படிகள் எடு என்று சொன்னால், 'இரண்டு படி அரிசி அளந்து போடு' என்று சொன்னால் 'ஒழுங்காகப் படி என்று சொன்னால். படி என்ற ப்+அ+ட்+இ என்ற நான்கு ஒலிகளையும் சேர்த்து சூழலுக்குத் தகுந்தாற்போல, அனுபவத்திற்குத் தகுந்தாற் போல பொருள் வேறுபாட்டை விரித்துக்கொண்டே வருகிறோம். தாய்மொழியைத் தன்னுணர்ச்சியோடு நாம் பயன்படுத்துவது இல்லை. அந்தத் தன்னுணர்ச்சியைப் பெற்றால் மொழி அறிவு வரும். சொல்லுக்கான பொருள் மாறிக்கொண்டே வருவதற்கு ஓர் உதாரணம் சொல்லட்டுமா?

கறி என்ற சொல் இன்றைக்குப் பொதுவாக இறைச்சியைக் குறிக்கின்ற ஒரு சொல்; ஆட்டுக்கறி, மாட்டுக்கறி. கோழிக்கறி என்பதாக. ஆனால் கறி என்ற சொல்லுக்கு முதற்பொருள் மிளகு என்பதாகும். பிறகு மிளகை உரித்து வெள்ளை மிளகு செய்தபோது இதைக் கருங்கறி என்று சொன்னார்கள். அன்றைக்கு உறைப்புக்காகப் பயன்படுத்தப்பட்ட பொருள் மிளகு என்பதனாலேயே, கறியிட்டுச் செய்கின்ற பொருட்கள் எல்லாம் கறி என்று வந்தன. பிறகு. குழம்புக்குக் கறி எனப் பெயர் வந்தது. 'உங்க வீட்டுல இன்னிக்கு என்ன கறி?' என்று சொன்னால் 'என்ன காயிட்டுக் குழம்பு?' என்று பொருள். பிறகு, காயோடு சேர்த்துக் காயும் கறியும் இட்டுச் சமைப்பதினாலே அல்லது கறியோடு இட்டுக் காயையும் சமைப்பதினாலே அதற்குக் காய்கறி என்று பெயர் வந்தது. பிறகு துணையாக வைத்துக்கொள்ளக்கூடிய கூட்டுக்களை எல்லாம் தொடுகறி என்று முன்னடையிட்டுச் சொன்னார்கள்.

நீங்கள் மறந்துவிடக் கூடாது. இந்தக் காய்கறியிலே கீரை அடங்காது. இரசம் சேராது. எது காய்கறி என்பதற்கு ஒரு வரையறை இருக்கிறது. எங்கே காய் இருக்கிறதோ அதற்குத்தான் காய்கறி என்று பெயர். பிறகு, மிளகிட்டுச் செய்யக்கூடிய, அதிக உறைப்பு தேவைப்படுகிற புலால் உணவுக்குக் கறி என்ற பெயர் வருகிறது. அப்புறம் புலால் துண்டுகளுக்கே கறி என்ற பெயர் வருகிறது. காரணம் உறைப்புக்கு வேறு சொல் கிடைத்துவிட்டதுதான். உறைப்பிற்கான இன்னொரு தாவரம் பதிமூன்றாம் நூற்றாண்டிலே வெளிநாடுகளிலே இருந்து அறிமுகமாகிறது. அது மிளகு போல் இருந்ததனாலே, அதைக் காயவைத்து வற்றலாக்கித்தான் பயன்படுத்த முடியும் என்பதாலே, அதற்கு மிளகாய் வற்றல் என்றும், மிளகாய் என்றும் பெயரிட்டார்கள். அதை மிளகினுடைய ஒரு மாற்று வடிவமாகக் கொண்டார்கள். அதற்கு மிளகாய் என்றும் மிளகாய் வற்றல் என்றும் பிறந்த தேசத்திலே பெயர் இருக்க முடியாது. மிளகு உறைப்புடையது. காயாக இருக்கிறது என்பதினாலே மிளகாய் என்று சொல்ல ஆரம்பித்தார்கள். இப்படித்தான் சொல்லும் பொருளும் அனுபவங்களும் மாறிக்கொண்டே வருகின்றன.

இந்த மாற்றங்களுள் மொழிக்கலப்பும் அடங்கும் அல்லவா?"

மொழிக்கலப்புகள் எல்லாம் ஒரே மாதிரியானவையல்ல. அரசதிகாரம் சார்ந்து, எழுத்திலக்கியம் சார்ந்து வந்த மொழிக் கலப்புகள் எல்லாம் பெரும்பாலும் வடமொழி வழியாக வந்தவை. கிறித்தவம் சார்ந்தும் இசுலாம் சார்ந்தும் வந்த மொழிக் கலப்புக்கள் எல்லாம் மக்கள் தரப்பிலிருந்து வந்தவை. 'குஸ்கா' என்ற சொல்லை எடுத்துக்கொள்வோம். புலால் சேர்ந்த நெய்ச்சோறுக்கு குஸ்கா என்று பெயர். இது மக்கள் வழியாகப் பரவிய சொல். இன்னிக்கு குஸ்கா என்ற சொல் எல்லாருக்கும் தெரியும். பாளையங்கோட்டையில் ஓ சி சி என்றால் எல்லாருக்கும் தெரியும். இதற்கு அப்பம் என்று பொருள். இது கிறிஸ்தவம் சார்ந்து வழங்குகின்ற சொல். அதுபோல் சொல்லுக்குக் கலாச்சார ரீதியான சில முத்திரைகளும் உண்டு. ஆண்டவர்

என்பதும் கர்த்தர் என்பதும் பொதுச்சொல்தான். ஆனாலும் இச்சொற்கள் கிறிஸ்தவப் பின்னணியோடுதான் அறியப்படுகின்றன. அது வாழ்தலின் அனுபவம். ஆண்டவர் என்ற சொல்லை இசுலாம் பாவிக்கும். உதாரணத்துக்கு நாகூர் ஆண்டவர். கர்த்தர் என்றோ இறைவன் என்றோ இசுலாமியர்கள் வழக்கமாகச் சொல்லமாட்டார்கள்.

இசுலாம் அதிகமாகப் பயன்படுத்துகிற சொல், மரியாதைக் குரிய சொல் 'அப்பா'. 'அவர்கள்' என்பதற்குப் பதிலாக 'அப்பா' என்ற சொல்லைப் பயன்படுத்துவார்கள். பீர் அப்பா, தக்கலை பீர் அப்பா, உமறுப் புலவரையே 'உமர்அப்பா'என்று எழுதுவார்கள். இது இந்த மொழிக்குள்ளிருந்து அவர்கள் எடுத்துக்கொண்ட சொல், அவர்கள் திருமணப் பத்திரிகையில் மணாளன், மணாளினி என்று இருக்கும். இதெல்லாம் இசுலாம், கிறிஸ்தவம் சார்ந்து வருகின்ற சொற்கள். அவர்களே தங்கள் புதுசமயத்திற்காக ஆக்கிக்கொண்ட சொற்கள். கோயில் என்பதற்கு மாற்றுச் சொல்லாக தேவாலயம் என்ற சொல்லைக் கைக்கொண்டனர். அதேபோல் வழிபடும் இடத்தை இசுலாமியர்கள் 'மஸ்ஜித்'என்ற சொல்லாலே சொல்லவில்லை. பள்ளிவாசல் என்ற சொல்லைக் கைக்கொண்டனர். எல்லாப் பள்ளிவாசல்களிலும் குழந்தைக்கு ஐந்து கலிமாவையும் ஓதக் கற்றுக்கொடுக்கின்ற ஓர் ஆள் உட்கார்ந்துகொண்டிருப்பார். இதனால்தான் அதற்குப் பள்ளி என்றே பெயர் வந்தது. கற்றுக் கொடுக்கிற இடம் பள்ளி. இது பழைய சமண, பௌத்த மரபிலிருந்து வந்தது. இதெல்லாம் மக்கட்சமூகத்தின் அனுபவங்கள். இச்சொற்களிலெல்லாம் அதிகாரம் இல்லை. இவைபோக, அதிகாரம் சார்ந்த சொற்களும் தமிழுக்குள் வந்துள்ளன. இதற்கு நல்ல எடுத்துக்காட்டுகள் தாசில்தார், கிஸ்தி என்பன. எழுத்துமரபு சார்ந்து, அதிகாரம் சார்ந்து, அரசாங்கத்தின்மூலமாக வருகின்ற சொற்கள்.

**குறிப்பிட்ட வேற்று மொழிச்சொல்லைத் தமிழ்ப்படுத்துவதைப் பற்றிச் சொல்லுங்களேன். உதாரணமாக, பென்சிலைக் 'கரித்துண்டு', சாவியைத் 'திறவுகோல்', சாக்பீசை 'சுண்ணாம்புக் கட்டி'என ஏன் சொல்ல வேண்டும்?**

பிறமொழிச் சொல்லுக்கான தமிழ்ச்சொல் குழந்தைக்குப் புரிகிறதா என்பதுதான் கேள்வி. 'திறவு' என்ற சொல் செயற்கையானது என்றாலும் குழந்தைக்குப் புரிகிறது. ஏன் புரிகிறது என்றால், 'கதவைத் திற' என்று வினைவடிவமாக நீங்கள் சொல்கிற போதும் 'கோயில் நடை திறந்தாச்சா?' என்று கேட்கும்போதும் 'திறத்தல்' என்கிற வினைவடிவத்தைக் குழந்தைக்கு அறிமுகம் செய்கிறீர்கள். எனவே 'திறப்பதற்குரியது' என்ற அளவிலே 'திறவு' என்ற பெயர்ச்சொல்லைக் குழந்தைகள் எளிதாகப் புரிந்து கொள்கிறார்கள். மேலும், கதவைத் திறக்க உதவுகிற அந்த சாவியினைக் குழந்தைகள் பார்த்திருப்பார்கள்; பயன்படுத்தியிருக்கிறார்கள்.

எனவே, திறவு என்பது அவர்களுக்குச் சிக்கல் இல்லை. அனுபவ எல்லைக்கு உள்ளாக, திரும்பவும் சொல்கிறேன், குழந்தைகளின் அனுபவ எல்லைக்கு உள்ளாக, அவர்களுக்குத் தெரிந்த மொழி எல்லைக்கு உள்ளாக, ஆங்கிலச் சொல்லிற்கு கற்றுக்கொடுப்பதில் மாற்றாக ஒரு புதுச்சொல்லைக் கற்றுக்கொடுப்பதில் சிக்கல் இல்லை.

சில சமயங்களில் புதிய அனுபவங்களை அறிமுகப்படுத்தி புதுச்சொற்களைச் சொல்லிக் கொடுக்க வேண்டியிருக்கும். காப்பிக்குக் 'குளம்பி' என்ற ஒரு சொல்லைக் கொடுக்கும்போது என்ன செய்யவேண்டுமென்றால், 'குதிரையின் குளம்புபோலக் காப்பிக்கொட்டை இருக்கிறது பார்' என்று காப்பிக்கொட்டையை எடுத்துக் குழந்தைக்குக் காட்ட வேண்டும். பொருள் பற்றிய அனுபவத்தைக் கொஞ்சம் தள்ளி வைத்துவிட்டு, வெறும் ஒலிபற்றிய, சொல்பற்றிய அனுபவங்களைக் குழந்தைகளுக்குக் கொடுக்கக் கூடாது. பொருள் பற்றிய அனுபவம் குழந்தைகளுக்கு வேண்டும்.

**இன்றைய சூழலுக்குரிய மொழிக் கல்வி எப்படி இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள்?**

சமூகச் சூழலோடு இணைந்த மொழிக்கல்வி நமக்குத் தேவை. சூழல் என்பதைக் கருப்பொருள், உரிப்பொருள் என்பதுடன் இணைத்துப் பார்க்கவேண்டும். சூழல் என்றாலே, நாம் ஏற்றத் தாழ்வான சாதிய, வர்க்க சூழலைத்தான் நினைவு கொள்கிறோம். ஆனால், கரு மற்றும் உரிப்பொருள் சார்ந்த அனுபவம்தான் குறிப்பிட்ட சூழலுக்கான தன்மையை வழங்குகின்றனவே தவிர, சாதி இல்லை. சங்கரன்கோயில் சார்ந்த எல்லாரும் தினைப்பயிரைப் பார்த்திருப்பார்கள். அது எப்படியிருக்கும் என்று திருநெல்வேலி ஆளுக்குத் தெரியாமல் இருக்கலாம். போத்திராஜா என்றால் இங்கு இருப்போர்க்குத் தெரியாது. ஆனால் இதைக்கேட்ட திருவண்ணாமலை மாவட்டக் குழந்தைகளுக்கு, அந்தப் பெரிய வயிறும் அந்த உருவமும் நினைவுக்கு வருகிறது இல்லையா? இங்கே சுடலைமாடன் என்றால்தான் தெரியும்.

நிலவியல் அமைப்பும் உயிரும் பயிரும் இவற்றோடு தொடர்புடைய பண்பாடும்தான் சூழலை உருவாக்குகின்றன. இவற்றோடு இணைக்கப்பட்ட மொழிக்கல்வி நமக்குத் தேவை. இதை வட்டார ரீதியாக உருவாக்கலாம். அல்லது வட்டார வழக்குகளின் தன்மையுடன்கூடிய பொது மொழியைக்கொண்டு இதைச் செய்யலாம்.

நன்றி : தொ.ப. ஆய்வுலகம்

# பனாட்டு

"பனையின் முன்னர் அட்டுவரு காலை
நிலையின் றாகும் ஐயென் உயிரே
ஆகாரம் வருதல் ஆவயி னான" (தொல். எழு.284)

'பனை' என்னும் நிலைமொழியின் முன் 'அட்டு' என்னும் வருமொழி வரின், முன்னதன் ஐகாரம் கெட்டு அவ்விடத்து ஆகாரம் வந்தேறிப் 'பனாட்டு' என்று முடியும் என்பது இந்நூற்பாவின் பொருள்.

'பனாட்டு' என்பது, இற்றைத் தமிழ்ப்பெரு நிலத்தில் சொல்லளவிலாயினும் பொருளளவிலாயினும் எங்கேனும் வழக்கிலில்லை. அது பனங்கருப்புக்கட்டிக்குப் பண்டைக் காலத்து வழங்கிய சொல்லாயிருக்கலாமென்று சிலர் உன்னிப்பாய்க் கூறினர். ஆயின், அது அஃதன்றென்பது, 'தமிழன் எங்கே? என்னும் நூலால் தெரியவருகின்றது.

"பனம் பழத்தை எடுத்து உரித்து, புளிங்காடி விட்டுப் பிசைந்து, களியாகப் பாயில் ஊற்றி, வெயிலிற் காயவிட்டுத் தயாரிக்கப்படுவது; தோற்றத்தில் சொக்கிலேற்றைப் (Chocolate) போன்றதாயிருக்கும்" என்று இந்நூலாசிரியர் கூறுகின்றார். (பக். 49–50)

இதனால், மேனாட்டார் போன்றே பல அரிய உண்பொருட்களைப் பண்டைத் தமிழர் உருவாக்கினர் என்பதும், அவற்றுட் பல இற்றைத் தமிழகத்தில் வழக்கிறந்தன என்பதும் பெறப்படுகின்றன.

நன்றி : பாவாணர் தமிழ்க்களஞ்சியம்

# திருக்குறளில் மோனைத் தொடை!

சென்ற இதழின் தொடர்ச்சி....



புலவர் வெற்றியழகன்
தலைவர்,
தொல்காப்பியர் தமிழ்ச்சங்கம், சென்னை

5. கூழை மோனை

கூழை மோனை என்பதற்குக் குறைந்து நிற்கின்ற மோனை என்பது பொருள். குட்டை மோனை என்றும் இதற்குப் பொருளுண்டு. நான்கு சீர்களைக் கொண்ட ஓரடியில் – முதற் சீரிலும் இரண்டாவது சீரிலும் மூன்றாவது சீரிலும் மோனை அமைந்து – இறுதிச் சீராகிய நான்காவது சீரில் மோனை அமையாமல் இருப்பதுவே கூழை மோனையாகும். எ.டு. தமிழகம் தமிழர் தமிழ்மொழி முதலே!

திருக்குறளில் கூழைமோனை

நமக்கு வாய்த்திருக்கின்ற உலகப் பொது நூலாகிய திருக்குறளில் திருவள்ளுவர் கூழை மோனையினை எவ்வாறு சரியாகப் பயன்படுத்தியுள்ளார் ; எத்தனை குறள்களில் பயன்படுத்தியுள்ளார் என்பதனைக் காண்போமாக.

தானம் தவமிரண்டும் தங்கா வியனுலகம்
– (குறள்.19)
அய்ந்தவித்தான் ஆற்றல் அகல்விசும்பு
ளார்கோமான் – (குறள்.25)
இல்வாழ்வான் என்பான் இயல்புடைய
மூவர்க்கும் – (குறள்.41)
இருந்தோம்பி இல்வாழ்வ(து) எல்லாம்
விருந்தோம்பி – (குறள்.81)
இனைத்துணைத்(து) என்பதொன்(று) இல்லை
விருந்தின் – (குறள்.87)
ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
– (குறள்.136)
ஒழுக்கம் உடையார்க்(கு) ஒல்லாவே தீய – 139)
உலகத்தோ(டு) ஒட்ட ஒழுகல் பலகற்றும்
– (குறள்.140)
பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை
ஞாலத்து – (குறள்.141)
எளிதென இல்லிறப்பான் எய்துமெஞ் ஞான்றும்
– (குறள்.145)
அஃகி அகன்ற அறிவென்னாம் யார்மாட்டும்
– (குறள்.175)
அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
– (குறள்.198)
ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
– (குறள்.233)
வசையொழிய வாழ்வாரே வாழ்வார்
இசையொழிய– (குறள்.240)
மனத்தது மாசாக மாண்டார்நீர் ஆடி –(குறள்.278)
களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்
– (குறள்.284)
அருள்கருதி அன்புடையர் ஆதல்
பொருள்கருதிப் – (குறள்.285)
பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றை
– (குறள்.350)
அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
– (குறள்.367)
இன்பம் இடையறா(து) ஈண்டும் அவாஎன்னும்
– (குறள்.369)
வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
– (குறள்.377)
செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம்
அச்செல்வம் – (குறள்.411)
செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார்
– (குறள்.431)
இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
– (குறள்.448)
பல்லார் பகைகொளலின் பத்தடுத்த தீமைத்தே
– (குறள்.450)
அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
– (குறள்.461)
ஆகா(று) அளவிட்டி(து) ஆயினும் கேடில்லை
– (குறள்.478)
ஊக்கம் உடையான் ஒடுக்கம் பொருதகர்
– (குறள்.486)
ஆற்றாரும் ஆற்றி அடுப இடனறிந்து
– (குறள்.493)
சிறுபடையான் செல்லிடஞ் சேரின்
உறுபடையான் – (குறள்.498)
தேரான் தெளிவும் தெளிந்தான்கண் அய்யுறவும்
– (குறள்.510)
காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
– (குறள்.527)
அல்லற்பட்(டு) ஆற்றா(து) அழுதகண்
ணீரன்றே – (குறள்.555)
இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல்
வேந்தன் – (குறள்.564)

உள்ளம் உடைமை உடைமை பொருளுடைமை
– (குறள்.592)
இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகும்தன்
– (குறள்.630)
தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
– (குறள்.634)
ஊறொரால் உற்றபின் ஒல்காமை
இவ்விரண்டின் – (குறள்.662)
செய்வினை செய்வான் செயல்முறை
அவ்வினை – (குறள்.677)
கடனறிந்து காலம் கருதி இடனறிந்து
– (குறள்.687)
தூய்மை துணைமை துணிவுடைமை
இம்மூன்றன் – (குறள்.688)
இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
– (குறள்.698)
குறித்தது கூறாமைக் கொள்வாரோ(டு) ஏனை
– (குறள். 704)
வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
– (குறள்.721)
மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
– (குறள்.742)
இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
– (குறள்.752)
அழிவின்றி அறைபோகா(து) ஆகி வழிவந்த
– (குறள்.764)
மறமானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
– (குறள்.766)
கேளிழுக்கம் கேளாக் கெழுதகைமை
வல்லார்க்கு – (குறள்.808)
நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
– (குறள்.833)
இகலானாம் இன்னாத எல்லாம் நகலானாம்
– (குறள்.860)
அஞ்சும் அறியான் அமைவிலன் ஈகலான்
– (குறள்.863)
வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும்
என்னாம் – (குறள்.897)
பயன்தூக்கிப் பண்புரைக்கும் பண்பில் மகளிர்
– (குறள்.912)
களித்தானைக் காரணம் காட்டுதல் கீழ்நீர்க்
– (குறள்.929)
கவறும் கழகமுங் கய்யும் தருக்கி – (குறள்.935)
மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
– (குறள்.973)
எண்பதத்தால் எய்தல் எளிதென்ப யார்மாட்டும்
– (குறள்.991)
ஈட்டம் இவறி இசைவேண்டா ஆடவர்
– (குறள்.1003)
சீருடைச் செல்வர் சிறுதுணி மாரி – (குறள்.1010)
ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனஇரண்டின்
– (குறள்.1022)
இரப்பார் இரப்பார்க்கொன்(று) ஈவார் கரவாது
– (குறள்.1035)
இரப்பாரை இல்லாயின் ஈர்கண்மா ஞாலம்
– (குறள்.1058)
இன்மை இடும்பை இரந்துதீர் வாமென்னும்
– (குறள்.1063)
நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல்
தாக்கணங்கு – (குறள்.1082)
கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
– (குறள்.1087)
ஒண்நுதற்(கு) ஓஒ உடைந்ததே ஞாட்பினுள்
– (குறள்.1088)
செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போல்
நோக்கும் – (குறள்.1097)
முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
– (குறள்.1113)
கவ்வையால் கவ்விது காமம் அஃதின்றேல்
– (குறள்.1144)
துறைவன் துறந்தமை தூற்றாகொல் முன்கை
– (குறள்.1157)
உறாஅர்க்(கு) உறுநோய் உரைப்பாய் கடலைச்
– (குறள்.1200)
கலந்துணர்த்துங் காதலர் கண்டால் புலந்துணராய்
– (குறள்.1246)
வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
– (குறள்.1268)
கண்நிறைந்த காரிகைக் காம்பேர்தோள்
பேதைக்குப் – (குறள்.1272)
எள்ளின் இனியவாகுமன்(று) எண்ணி
அவர்திறம் – (குறள்.1298)

6. மேற்கதுவாய் மோனை

கதுவுதல் என்றால் பற்றுதல் என்று பொருள். கதுவாய் என்றால் வடுப்படல் என்று பொருள். ஓரடியில் உள்ள நான்கு சீர்களுள் முதற்சீரிலும் மூன்றாவது சீரிலும் நான்காவது சீரிலும் முதலெழுத்து ஒன்றிவந்து மேற்கதுவாய் மோனை ஆகியுள்ளது. பற்றுதல் மேலிருந்து தாவிவந்து பற்றுதல். வடுப்படல் – நான்கு சீர்களுள் ஒரு சீரில் மட்டும், அஃதாவது முதலடியின் இரண்டாவது சீரில் மட்டும் மோனை அமையாமல் இருத்தலாகும்.

எ.டு. செய்யுள் இலக்கணம்
செம்மைகொள் செந்தமிழ்!

திருக்குறளில் மேற்கதுவாய் மோனை

அய்யன் திருவள்ளுவர் தாம் யாத்தளித்த திருக்குறளில் மேற்கதுவாய் மோனையினை எவ்வாறு கடைப்பிடித் துள்ளார். எத்தனை குறள்களில் கடைப்பிடித்துக் காட்டியுள்ளார் என்பதனைக் காண்போமாக.

வான்நின்(று) உலகம் வழங்கி வருதலால்
– (குறள்.11)
விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து
– (குறள்.13)
மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
– (குறள்.60)
அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
– (குறள்.71)
உதவி வரைத்தன்(று) உதவி உதவி
– (குறள்.105)
நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
– (குறள்.108)
எள்ளாமை வேண்டுவான் என்பான்
எனைத்தொன்றும் – (குறள்.281)
உள்ளத்தால் பொய்யா(து) ஒழுகின் உலகத்தார்
– (குறள்.294)
செல்லா இடத்துச் சினம்தீது செல்லிடத்தும்
– (குறள்.302)
உள்ளிய(து) எல்லாம் உயர்வுள்ளல் உள்ளத்தான்
– (குறள்.309)
ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
– (குறள்.370)
தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச்
செய்வார்க்கு – (குறள்.462)
செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
– (குறள்.466)
உடைத்தம் வலியறியார் ஊக்கத்தின் ஊக்கி
– (குறள்.473)
தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபின்
– (குறள்.509)
நன்மையும் தீமையும் நாடி நலம்புரிந்த
– (குறள்.511)
அச்சம் உடையாரக்க்(கு) அரணில்லை
ஆங்கில்லை – (குறள்.534)
அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
– (குறள்.543)
கண்ணோட்டம் என்னுங் கழிபெருங் காரிகை
– (குறள்.571)
கண்ணோட்டம் இல்லவர் கண்ணிலர்
கண்ணுடையார் – (குறள்.577)
சிறப்பறிய ஒற்றின்கண் செய்யற்க செய்யின்
– (குறள்.590)
தாளாண்மை என்னுந் தகைமைக்கண்
தங்கிற்றே – (குறள்.613)
வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம்
வேந்தன்கண் – (குறள்.665)
இறுதி பயப்பினும் எஞ்சா(து) இறைவற்கு
– (குறள்.690)
கல்லா தவரின் கடையென்ப கற்றறிந்தும்
– (குறள்.729)
தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
– (குறள்.731)
ஆற்று பவர்க்கும் அரண்பொருள் அஞ்சித்தற்
– (குறள்.741)
செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
– (குறள். 759)
தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
– (குறள்.767)
அழிவந்த செய்யினும் அன்பறார் அன்பின்
– (குறள்.807)
கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
– (குறள்.809)
காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
– (குறள்.866)
இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை
எஞ்ஞான்றும் – (குறள்.903)
நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நல்நுதலாள்
– (குறள்.908)
எண்சேர்ந்த நெஞ்சத்(து) இடனுடையார்க்(கு)
எஞ்ஞான்றும் – 910)
ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
– (குறள்.923)
கள்ளுண்ணாப் போழ்தில் களித்தானைக்
காணுங்கால் – (குறள்.930)
இற்பிறந்தார் கண்ணல்ல(து) இல்லை
இயல்பாகச் – (குறள்.951)
குன்றின் அனையாரும் குன்றுவர் குன்றுவ
– (குறள்.965)
இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த
– (குறள்.1044)
துப்புரவு இல்லார் துவரத் துறவாமை
– (குறள்.1050)
இன்பம் ஒருவற்(கு) இரத்தல் இரந்தவை
– (குறள்.1052)
கரவா(து) உவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்
– (குறள்.1061)
மறப்பின் உவனாவின் மற்கொல் மறுப்பறியேன்
– (குறள்.1207)

7. கீழ்க்கதுவாய் மோனை

ஓரடியில் அமைந்துள்ள நான்கு சீர்களுள் – முதற்சீரிலும் இரண்டாவது சீரிலும் நான்காவது சீரிலும் முதலெழுத்தாகிய மோனை அமைந்திருந்து – மூன்றாவது சீரில் மட்டும் மோனை அமையாமல் இருத்தல் கீழ்க்கதுவாய் மோனையாகும். மேலிருந்து பற்றியது மேற்கதுவாய்; கீழிருந்து பற்றுவது கீழ்க்கதுவாய் எனப்படும்.

எ.டு. அருந்தமிழ் அனைத்து
மொழிக்கும் அன்னை!

திருக்குறளில் கீழ்க்கதுவாய் மோனை

திருக்குறளில் அய்யன் திருவள்ளுவர் கீழ்க்கதுவாய் மோனையினை எவ்வகையில் அமைத்துள்ளார்; எத்தனை குறள்களில்

அமைத்துள்ளார் என்பதனைக் காண்போமாக.

இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன்
– (குறள்.5)
அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு)
அல்லால் – (குறள்.8)
செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
– (குறள்.26)
அறத்தினூஉங்(கு) ஆக்கமும் இல்லை அதனை
– (குறள்.32)
இயல்பினான் இல்வாழ்க்கை வாழ்பவன்
என்பான் – (குறள்.47)
தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
– (குறள்.56)
அன்பீனும் ஆர்வம் உடைமை அஃதீனும்
– (குறள்.74)
அறத்திற்கே அன்புசார்(பு) என்ப அறியார்
– (குறள்.76)
வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
– (குறள்.83)
இன்சொல் இனிதீன்றல் காண்பான்
எவன்கொலோ – (குறள்.99)
அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
– (குறள்.121)
அழுக்கற்(று) அகன்றாரும் இல்லை அஃதில்லார்
– (குறள்.170)
வேண்டற்க வெஃகியாம் ஆக்கம் விளைவயின்
– (குறள்.177)
சொல்லுக சொல்லில் பயனுடைய சொல்லற்க
– (குறள்.200)
தீயவை தீய பயத்தலால் தீயவை – (குறள்.202)
தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
– (குறள்.212)
இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
– (குறள்.223)
இன்னா(து) இரக்கப் படுதல் இரந்தவர்
– (குறள்.224)
ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை
– (குறள்.225)
அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
– (குறள்.226)
செய்யாமல் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்
– (குறள்.313)
நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம்
நோய்செய்யார் – (குறள்.320)
கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
– (குறள்.418)
அஞ்சுவ(து) அஞ்சாமை பேதைமை அஞ்சுவது
– (குறள்.428)
செயற்பால செய்யா(து) இவறியான் செல்வம்
– (குறள்.437)
ஆற்றின் அளவறிந்(து) ஈக அதுபொருள்
– (குறள்.477)
காலங் கருதி இருப்பர் கலங்காது – (குறள்.485)
கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடும்
– (குறள்.496)
காலாழ் களரின் நரிஅடும் கண்ணஞ்சா
– (குறள்.500)
வான்நோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்
– (குறள்.542)
கூழுங் குடியும் ஒருங்கிழக்கும் கோல்கோடிச்
– (குறள்.554)
எல்லார்க்கும் எல்லாம் நிகழ்பவை எஞ்ஞான்றும்
– (குறள்.582)
ஒற்றொற்(று) உணராமை ஆள்க உடன்மூவர்
– (குறள்.589)
ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
– (குறள்.594)
வினைக்கண் வினைகெடல் ஓம்பல்
வினைக்குறை – (குறள்.612)
மடியுளாள் மாமுகடி என்ப மடியிலான்
– (குறள்.617)
ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
– (குறள்.620)
இடும்பைக்(கு) இடும்பை படுப்பர் இடும்பைக்கு
– (குறள்.623)
பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
– (குறள்.633)
தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
– (குறள்.672)
கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
– (குறள்.717)
கற்றாருள் கற்றார் எனப்படுவர் கற்றார்முன்
– (குறள்.722)
ஆற்றின் அளவறிந்து கற்க அவையஞ்சா
– (குறள்.725)
நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
– (குறள்.739)
உறுபொருளும் உல்கு பொருளும்தன்
ஒன்னார்த் – (குறள்.756)
நாடாது நட்டலின் கேடில்லை நட்டபின்
– (குறள்.791)
அமரகத்(து) ஆற்றறுக்கும் கல்லாமா அன்னார்
– (குறள்.814)
பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கண்
– (குறள்.839)
காணாதான் காட்டுவான் தான்காணான்
காணாதான் – (குறள்.849)
இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னும்
–(குறள்.854)
பெரியாரைப் பேணா(து) ஒழுகின் பெரியாரால்
– (குறள்.892)
குன்றன்னார் குன்ற மதிப்பின் குடியொடு
– (குறள்.898)
பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர்
– (குறள்.902)

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை
வென்றதூஉம் – (குறள்.931)
அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு
– (குறள்.943)
ஆற்றவார் ஆற்றல் பணிதல் அதுசான்றோர்
– (குறள்.985)
இன்மையின் இன்னாதி யாதெனின்
இன்மையின் – (குறள்.1041)
தொல்வரவுந் தோலுங் கெடுக்கும் தொகையாக
– (குறள்.1043)
நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும்
நல்கூர்ந்தார் – (குறள்.1046)
அகப்பட்டி ஆவாரைக் காணின் அவரின்
– (குறள்.1074)
கண்ணுள்ளார் காதல் அவராகக் கண்ணும்
– (குறள்.1127)
அலரெழ ஆருயிர் நிற்கும் அதனைப்
– (குறள்.1141)
களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றால்
காமம் –(குறள்.1145)
காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
– (குறள்.1167)
காணுங்கால் காணேன் தவறாய காணாக்கால்
– (குறள்.1286)
தஞ்சம் தமரல்லர் ஏதிலார் தாமுடைய
– (குறள்.1300)

8. முற்றுமோனை

செய்யுளின் ஓரடியுள் அமைந்திருக்கும் நான்கு சீரிலும் மோனை அமைந்திருத்தல் – முற்றுமோனை என்பதாகும். முற்றும் என்னுஞ் சொல்லுக்கு முடிந்தது என்னும் பொருளில்லை; முழுவதும் என்பதுவேயாகும். முடிந்தது என்பதற்கு முடிவுற்றது; முற்றுப் பெற்றது என்று எழுதுதல் வேண்டும்.

எ.டு. இலக்கண இன்பம் இணையிலா இன்பம்

திருக்குறளில் முற்றுமோனை

திருக்குறளில் நம் அய்யன் திருவள்ளுவர் முற்றுமோனையினை எவ்வாறு கடைப்பிடித்துள்ளார் ; எத்தனை குறள்களில் கடைப்பிடித்து அமைத்துள்ளார் என்பதனைக் காண்போமாக.

துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
– (குறள்.12)
வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
– (குறள்.50)
பெற்றாற் பெறின்பெறுவர் பெண்டிர்
பெருஞ்சிறப்புப் – (குறள்.58)
உண்ணாமை உள்ள(து) உயிர்நிலை
ஊனுண்ண – (குறள்.255)
ஓர்ந்துள்ளம் உள்ள(து) உணரின் ஒருதலையாப்
– (குறள்.357)
கற்க கசடறக் கற்பவை கற்றபின் – (குறள்.391)
எண்ணென்ப ஏனை எழுத்தென்ப
இவ்விரண்டுங் – (குறள்.392)
அறிவுடையார் ஆவ(து) அறிவார் அறிவிலார்
– (குறள்.427)
எண்ணியார் எண்ணம் இழப்பர் இடனறிந்து
– (குறள்.494)
இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
– (குறள்.517)
அழிவின் அவைநீக்கி ஆறுய்த்(து)
அழிவின்கண் – (குறள்.787)
இளையர் இவரெமக்(கு) இன்னம்யாம் என்று
– (குறள்.790)
குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
– (குறள்.793)
ஆயும் அறிவினர் அல்லார்க்(கு) அணங்கென்ப
– (குறள்.918)
சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு – (குறள்.962)
இரப்பன் இரப்பாரை எல்லாம் இரப்பிற்
– (குறள்.1067)

முடிவுரை

திருக்குறளில் – அய்யன் திருவள்ளுவர் – பயன்படுத்தியுள்ள தொடை வகையுள் – மோனைத் தொடையுள் –

1. அடிமோனையினை அறுபத்து மூன்று குறள்களிலும் ;

2. இணை மோனையினை முந்நூற்றிருபது குறள்களிலும் ;

3. பொழிப்பு மோனையினை நூற்றுத் தொண்ணூற்றிரண்டு குறள்களிலும் ;

4. ஒரூஉ மோனையினை எழுபத்து மூன்று குறள்களிலும்;

5. கூழை மோனையினை எழுபத்தாறு குறள்களிலும்;

6. மேற்கதுவாய் மோனையினை நாற்பத்து நான்கு குறள்களிலும்;

7. கீழ்க்கதுவாய் மோனையினை அறுபத்தாறு குறள்களிலும்;

8. முற்றுமோனையினைப் பதினாறு குறள்களிலும் பயன்படுத்தி, கருத்துச் செறிவு மிகுந்த வயிரக் கட்டி போன்ற குறள்களுக்கு மோனை என்னும் பட்டை தீட்டிப் பளபளக்க வைத்துள்ளார்.

மோனைத் தொடையும் எதுகைத் தொடையும் முரண்தொடையும் சேர்ந்தே குறளை மனத்தில் பதியவைக்கின்றன. இச்சிறப்பினை நாம் உணர்ந்து இலக்கணக் காப்பினைத் தமிழ்ச் செய்யுளுக்குக் கொடுத்துத் தமிழையும் தமிழ் இலக்கணத்தையுங் காப்போமாக. மற்ற தொடைகளைத் தொடர்ந்து பார்ப்போமாக.

# அசையும் இசையும்!

முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"கல்லும் இசையால் கனியாகும்
முள்ளும் அதனால் மலராகும்
உள்ளம் உருகும் பண்பாடும் – அந்த
ஓசையிலே நாகம் நின்றாடும்."
(வாலி, கல்லும் கனியாகும்).

------------

ஊமையாக இருந்தவன் கத்தினான்; உரக்கக் கத்தினான்; மென்மையாகக் கத்தினான்! கத்தியவன் பேசினான்; பேசியவன் பாடினான்!

டம டம டம டம டம என்று பறை தட்டினால் ஓசை!
டம்டம, டம்டம, டம்டம, டம்டம;
டம்டம்டம, டம்டம்டம, டம்டம்டம;
டம்டம்டமடம, டம்டம்டமடம, டம்டம்டமடம எனத் தட்டினால் இசை!
ஓசை – ஓர் ஒழுங்கில் அமைந்தால் இசை!
அதனால் தான் நேர் அசை, நிரை அசை!
(binary codes!)

"நீலவான் ஆடைக்குள் உடல்ம றைத்து
நிலா என்று காட்டுகின்றாய் ஒளிமு கத்தை!
கோல முழுதும் காட்டி விட்டால் காதல்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ? வானச்
சோலையிலே பூத்த தனிப் பூவோ நீ தான்
சொக்க வெள்ளிப் பால்குடமோ, அமுத ஊற்றோ
காலை வந்த செம்பரிதி கடலில் மூழ்கிக்
கனல் மாறிக் குளிர் அடைந்த ஒளிப்பி ழம்போ?"
(பாவேந்தர்).

இந்த 'காய் காய் மா தேமா' என்ற அமைப்பிலான எண்சீர் மண்டிலத்தில் முதற் சீரே 'நேர் நிரை' என்று அமைந்து காய்ச் சீருக்கு ஓர் அசை குறைவாக உள்ளது. இந்த ஓர் அசையை இட்டு நிரப்பிப் பாவேந்தர் 'நீலவான ஆடைக்குள் உடல்ம றைத்து' என எழுதியிருக்கலாம்! யாப்பிலக்கணப்படி தவறாகாது.
ஆனால், தமிழுக்கே உரிய இசையிலக்கணம் அதாவது செவி நுகரும் இனிமை இலக்கணம் கெட்டுவிடும்.

'நீலவான' என்பதைக் 'கூவிளங்காய்ச்' சீர் என்று அலகிடுவோம்.
ஆனால், உண்மையில் அது யாப்பிலக்கணம் சுட்டாத 'விளாங்காய்ச்' சீராகும்.
விளங்காயா? விளாங்காயா? விளாங்காயாக விட்டிசைப்பதை விடக் கூவிளமே சிறந்த இசைநயம் தரும் எனப் பாவேந்தர் எண்ணியிருப்பார் போலும்!
ஆகவே 'நீலவான்' அமைந்தது.

அசையா இசையா என்ற வினா எழுந்தால் இசை நுட்பமே முதலிடம் பெறுதல் வேண்டும்!
இனிமையே தமிழ்!

'காலைவந்த' என்னும் சீரைக் 'காலை வந்த' எனப் பிரித்தால் தேமா தேமா என இரண்டு சீர்களாகிவிடும்.
'லை' என்பதை ஐகாரக் குறுக்கமாக்கி ஒரு மாத்திரை அளவே ஒலிப்பதனால் கூவிளங்காய்ச் சீராகி இலக்கணமும் இசையும் கெடாமல் அமைகிறது.
'இனிமைத் தமிழ்மொழி எமது' அன்றோ?

வெண்பா ஒன்றின் ஈற்றடியாகப் பாவலர் ஒருவர் எழுதியிருந்தார்:
'இந்தமண்ணில் வேறுண்டோ ஈடு?"

கூவிளங்காய் தேமாங்காய் காசு – வெண்டளை தட்டாத ஈற்றடி தான்.
ஆனால், 'இந்தமண்ணில்' என்பது 'இந்த', 'மண்ணில்' எனப் பிரிந்திசைக்கும் போது ஓசை நயம் சற்றே பிசிறு தட்டுவது போல இருக்கும்.
இந்த ஈற்றடியைச் சற்றே மாற்றி 'இம்மண்ணில் வேறுண்டோ ஈடு?" என எழுதிடின் யாப்பிலக்கணம் முன்போலவே அமைந்து வெண்டளை சிறக்கும்; ஓசைநயம் மிகும் என்பது என் கருத்து.

எடுத்துக் காட்டாக,
'வையத்தில் சான்றோர்கள் வாழ்த்தியுனைப் போற்றுமாறு
செய்திடுக நல்ல செயல்'
என்று குறட்பா எழுதினால் வெண்டளை இலக்கணப்படி தளை தட்டாது; ஆனால் இசை தட்டும்.
இதைச் சற்றே மாற்றி 'வாழ்த்தியுனைப் போற்றிடவே' என்று திருத்தினால் கூவிளாங்காய் கூவிளங்காய் ஆகிவிடும்.

இன்னொன்று பலருடைய பாக்களில் நான் காண்பது.
குற்றியலுகரம் + உயிர்.
'உயிர் வரின் உக்குறள் விட்டு ஓடும்'

எடுத்துக் காட்டாக,
'எந்நாளும் உன்னுடனே வருவேன் சேர்ந்து
என்னைநீ ஏற்றிடுவாய் மனங்க னிந்து' என்று
எழுதும் போது 'சேர்ந்து + என்னை' என்பது சேர்ந்
தென்னை' என்று ஆகிவிடும். அதாவது 'சேர்ந்து'
என்னும் தேமாச் சீர் 'சேர்ந்' என ஓர் அசை கெட்டு,
அதனால் இசை கெட்டு நிற்கும்.
இப்படி அசையும் இசையும் கெடாமல், சொல்லும்
பொருளும் மாறாமல், உயிர் ஓடாது இருக்க ஓர்
எளிய மருத்துவம்:
(உன்னுடனே / உன்னுடன்நான்) வருவேன்
'சேர்ந்தே'... மனங்க 'னிந்தே' என்று 'ஏ'காரம்
சேர்த்துவிடலாம்!
இசைகெடாது! அசைபோட்டால் பாடல் இனிக்கும்!
படிப்போரும் பாட்டை அசை போடுவர்!

"சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்
பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்!
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்தில் பிறந்து நீ
குற்றேவல் எங்களைக் கொள்ளாமற் போகாது
இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண்
கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கேநாம்
ஆட்செய்வோம்
மற்றை நம் காமங்கள் மாற்றேலோர் எம்பாவாய்."
(திருப்பாவை).

வெண்டளை பிறழாது எழுதப்படுவனவே பாவை
நூலில் அமையும் இயற்றரவிணைக் கொச்சகக்
கலிப்பாக்கள்.

வெண்பாவில் ஓரடியின் இறுதிச் சீரும் அடுத்த
அடியின் முதற்சீரும் வெண்டளையால்
பிணிக்கப்பட வேண்டும்.
ஆனால், பாவை நூலில் வரும் கொச்சகக்
கலிப்பாக்களில் இது கட்டாயம் இல்லை
எனப்படுகிறது.

மேற்கூறிய பாடலின் நான்காவது அடியின் இறுதிச்
சீர் 'போகாது', அடுத்த அடியின் முதற்சீர் 'இற்றை'
என்பது.
'போகா திற்றை' எனப் புணர்த்தெழுதி
அலகிடும்போது 'தேமா தேமா' என்றாகி,
'மா முன் நேர் – நேரொன்றாசிரியத்தளை'
ஆகிவிடும். ஆதலின் அடிகளைத் தனித்தனியாக
அலகிட்டால் போதுமெனக் கூறுவர்.

செவிகளே தமிழ் யாப்பின் இலக்கணம். காதுக்கு
இனிமை பயந்தால் பாடல்.
'நேர் நிரை, காய் கனி' எனச் செய்யப்பட்டால் அது
செய்யுளாகிவிடும்.

இயற்கைத் தோய்வும் இனிய உணர்வும் இணைந்து
எளிய சொற்களில் கனிந்து வெளிப்படுவது நல்ல
பாடலாகும்.

பாடல் கேட்டார்ப் பிணிக்கும் தகையதாய் அமைய
வேண்டும். கேட்டார் பிணிப்பதாக அமைந்துவிடக்
கூடாது!

சொல்லும் பொருளும் ஓசையும் சந்தமும் பிரியாமல்
ஒன்றிணைந்து வெளிப்படின் சிறந்த பாடலாகும்!
இசை – இயை – இழை – இணை!

"Poetry is music in words, and music is poetry in sound."
– John Fuller.
"Rhythm is a part of the structure of a poem unless the poem is written in free verse. Poetry is a craft that requires purposeful construction. The rhythm of a poem gives it its flow and beat, so rhythm is a very critical component of well-written poems."

*****

ஓசை நுகர்தல், முகர்தல் – (காற்றில் வரும்
இசைக் குறிப்பை) முகத்தல் – (காது, கண், மூக்கு
வாய் என்னும் புலன்களால் முகக்கும்) முகம் – மூம்
– மூஞ்சி > muzzle – muse – music!
இதற்கான வேர்ச்சொல் தெரியவில்லை எனக்
கூறப்படுகிறது.

muse (v.)
"to reflect, ponder, meditate; to be absorbed in thought," mid-14c., from Old French muser (12c.) "to ponder, dream, wonder; loiter, waste time," which is of uncertain origin; the explanation in Diez and Skeat is literally "to stand with one's nose in the air" (or, possibly, "to sniff about" like a dog who has lost the scent), from muse "muzzle," from Gallo-Roman *musa "snout," itself a word of unknown origin. The modern word probably has been influenced in sense by muse (n.). Related: Mused; musing.

ஆழ்ந்து ஆராய்தல் என்னும் பொருளதான
உன்னுதல் – முன்னுதல் என்பது muse (< music)
என்னும் பெயர்ச்சொல்லின் வேராக அதாவது
இந்தைஐரோப்பிய மூலமாக 'முன்' காட்டப்படுகிறது.

Muse (n.)
late 14c., "one of the nine Muses of classical mythology," daughters of Zeus and Mnemosyne, protectors of the arts; from Old French Muse and directly from Latin Musa, from Greek Mousa, "the Muse," also "music, song," ultimately from PIE root *men- (1) "to think." Meaning "inspiring goddess of a particular poet" (with a lower-case m-) is from late 14c.

# தொல்காப்பியம் – செய்யுளுறுப்பு: பயன் – பொருண்மை நோக்கு



முனைவர் ப. கொழந்தசாமி,

அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

உலக இலக்கணத் தளத்தில் தொல்காப்பியத்திற்குச் சிறப்பான பெருமை உண்டு; அவற்றுள் பொருளதிகாரமும் ஒன்றாகும். இலக்கிய வகைமை, பாடுபொருள், வடிவம், முருகியல், உணர்ச்சிகள், சொல் வழக்கு வரையறை போன்றன பொருளதிகாரத்தில் இலக்கணப்படுத்தப்பட்டுள்ளன. இலக்கிய வடிவ அமைப்பியலையும் பொருண்மை இயக்கத்தையும் செய்யுளியல் வகுத்துரைக்கின்றது. செய்யுளியலின் முதல் நூற்பா செய்யுள் (34) உறுப்புகளை அறிமுகப்படுத்த, அவை பின்னர் விரித்துரைக்கப்படுகின்றன. இவற்றுள் ஒன்று பயன் என்பதாகும்.

பயன்: ஒன்றால் விளைகின்ற பேற்றைப் பயன் என்று குறிக்கின்றனர். மனிதனின் ஒவ்வோர் எண்ணமும் பேச்சும் செயலும் தனி மனிதனுக்கும் ஒட்டுமொத்த உயிரினங்களுக்கும் நற்பேறாக வேண்டும். இவ்வாறே மானுட மேன்மைக்காக மனிதப் பற்றாளர்கள் ஆக்குகின்ற இலக்கியங்களும் இயங்கலாம். இலக்கியவியல் கலைச்சொல்லான பயனைத் தொல்காப்பியர்,

இதுநனி பயக்கும் இதனால் என்னும்
தொகைநிலைக் கிளவி பயன் எனப்படுமே (நூற்பா 1462)

என்று விளக்கியுள்ளார். மேலோட்டமாக நோக்கும்போது ' இதனால் இவ்வாறு இவ்வளவு பேறு' கிட்டும் என்று இது இலக்கியப் பயனைச் சுட்டுவதாகத் தோன்றும். ஆனால் பொருண்மையியல் அணுகுமுறையில், இந் நூற்பாவிலுள்ள தொகைநிலைக் கிளவி என்னும் சிறப்புத் தொடரை நோக்கும்போது நுண்பொருள் புதைந்திருப்பதை வெளிப்படுத்தமுடியும். படைப்பாளனோடு நுகர்வோனையும் மையமிட்டதாகப் படைப்பு இயலவேண்டும். படைப்பின் ஒவ்வொரு கூறிலும் மானுட மேன்மைக்கான கருத்துப் புதைந்திருக்கவேண்டும் சொன்னதிலிருந்து விளம்ப விரும்புவதை / படைப்பின் அடிக்கருத்தை / வாசகனுக்கு உணர்த்த விழைவதை இலக்கியம் தெளிவாக உணர்த்தலாம். இவண் தொல்காப்பியம் சுட்டுகின்ற உள்ளுறை; இறைச்சி; அன்மொழித்தொகை; ஒழியிசை எச்சம்; அறத்தொடு நிற்றல் ஆகிய இலக்கணச் செய்திகளை ஒப்பலாம். மேலும், மரபியலில் நூலாக்க/ நுகர்வு மரபை இலக்கணப்படுத்தும்போது,

சொல்லிய அல்ல பிற அவண் வரினும்
சொல்லிய வகையால் சுருங்க நாடி
மனத்தின் எண்ணி மாசறத் தெரிந்துகொண்டு
இனத்திற் சேர்த்தி உணர்த்தல் வேண்டும்
நுனித்தகு புலவர் கூறிய நூலே (நூற்பா 1610)

என்று தொல்காப்பியம் கருதுவதை இவண் எண்ணலாம். ஒரு கூற்றில் அனைத்தயும் சொல்லாடாவிட்டாலும் கூற முயல்வதை உணர்வது சீரிய பொறுப்பான நுகர்வு முயல்வாகும்.

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின் (குறட்பா 475) என்னும் குறட்பாவில் கூட்டு வலிமை புலக்காட்சிப்படுத்தப்பட்டு நுகர்வானுக்குப் படைப்பாளன் உணர்த்த விழைகின்ற கூட்டு வலிமையின் வீச்சு உள்ளுறைகின்ற செய்தியாக அமைகின்றது.

எனவே பயன் என்னும் கலைச்சொல்லால் தொல்காப்பியம் இலக்கிய நுகர்வு மரபை விளக்குவது அறியலாகின்றது. இலக்கியப் படைப்பும் வாசிப்பும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்களாகின்றன;

இந்த இரண்டும் ஒத்தியங்கும்போது அனைவரும் வையத்துள் வாழ்வாங்கு வாழ மானுடம் வெல்லும்.